சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ் சி

உ

செந்திலாண்டவன் துணை



# ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்
# 278 ஆம் ஆண்டு மகேசுவர பூசைத் திருநாள்

பராபவ ௵ வைகாசி ௴ 23 ௳ ஞாயிற்றுக்கிழமை



## 5—6—1966

ஸ்ரீ காசி மடம் :: திருப்பனந்தாள்

சிவ சிவ

## ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் மகேசுவர பூசைத் திருநாளன்று

தெற்கே இராமேசுவரம் கன்னியாகுமரி முதல் வடக்கே இமயமலையில் 12,000 அடி உயரத்திலுள்ள திருக்கேதாரம் வரையிலுள்ள தலங்களில் நடைபெறும் அந்தணர், அருந்தவர், ஏழைகளுக்கு அன்னம்பாலிப்பு

# தருமங்களின் விவரம்

## திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றவை

| தொடர் எண் | மூலதனம் ரூபாய் | அன்னம்பாலிப்பு நடைபெறும் தலங்கள் | அன்னம் பாலிப்பு செலவுத் தொகை ரூ. | கண்காணிப்பவர்கள் விலாசம் |
|---|---|---|---|---|
| 1 | 10,000 | இராமேசுவரம் | 350 | ஸ்ரீ காசிமடம், சன்னிதித்தெரு, இராமேசுவரம். |
| 2 | 7,000 | கன்னியாகுமரி | 200 | ஸ்ரீ காசிமடம், ஆச்சிராமம். |
| 3 | 5,000 | திருச்செந்தூர் | 140 | திரு. T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L., ஸ்ரீவைகுண்டம். |
| 4 | 9,000 | ஸ்ரீவைகுண்டம் | 275 | டி. டி. டி. |
| 5 | 5,000 | திருநெல்வேலி | 140 | திரு. சி. ச. அருணாசலம்பிள்ளை, உரிமையாளர், கணபதி ஆலை, தாழையூத்து. |
| 6 | 5,000 | பழையபாபநாசம் | 140 | திரு. D. மரகதசுப்பிரமணியப் பிள்ளை, அம்பாசமுத்திரம். |
| 7 | 5,000 | திருக்குற்றாலம் | 190 | திரு. T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L., ஸ்ரீவைகுண்டம். |
| 8 | 5,000 | உத்தரகோசமங்கை | 140 | திரு. M. V. ராகவேந்திரராவ், B. A., திவான், இராமநாதபுரம் சமஸ்தானம், இராமநாதபுரம். |
| 9 | 5,000 | திருப்பெருந்துறை | 140 | திரு. S. முருகேசம் பிள்ளை, திருலோக்கி. |
| 10 | 2,50,000 | மதுரை | 500 | சிவஸ்ரீ சிவதர்மபாஸ்கர, ம. க. சுந்தரேசபட்டர், மதுரை. |
| | | கன்னியாகுமரி ஆச்சிரா [illegible] தருமங்கள் | | [illegible] |

| | | | | |
|---|---|---|---|---|
| 11 | 10,000 | பழநி | 285 | ஸ்ரீ சிவகுமாரசுவாமிகள், ஸ்ரீ சாதுசுவாமிகள் மடம், பழநி. |
| 12 | 5,000 | விராலிமலே | 140 | திரு. வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார், திருச்சிராப்பள்ளி. |
| 13 | 7,000 | திருவானேக்கா | 200 | ஷை ஷை ஷை |
| 14 | 6,000 | திருவையாறு | 190 | திரு. அண்ணுசாமி பாகவதர், திருவையாறு. |
| 15 | 7,000 | சுவாமிமலே | 200 | திரு. N. R. ராமாநுஜம் B. A., கும்பகோணம். |
| 16 | 5,000 | திருவிடைமருதூர் | 140 | Dr. A. சுந்தரம் L. I. M., திருவிடைமருதூர். |
| 17 | 1,00,000 | திருப்பனந்தாள் | 4,000 | ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். |
| 18 | 5,000 | வேதாரண்யம் | 140 | திரு. S. P. வெங்கடராமையர், பெரி. அழ. மு. அன்னசத்திரம், வேதாரணியம். |
| 19 | 5,000 | திருப்புகலூர் | 200 | திரு. N. M. சோமசுந்தரம் பிள்ளே, திருப்புகலூர். |
| 20 | 7,000 | திருவாரூர் | 200 | திரு. டி. சோமாஸ்கந்த தேசிகர், திருவாரூர். |
| 21 | 5,000 | திருநாகைக்காரோணம் | 150 | திரு. S. சுப்பையா முதலியார், அத்திப்புலியூர். |
| 22 | 5,000 | திருநள்ளாறு | 140 | திரு. குட்டியப்பபிள்ளே, ஷராப், ஸ்ரீ தர்பாரண்யேசுவரர் தேவஸ்தானம், திருநள்ளாறு. |
| 23 | 5,000 | காவிரிப்பூம்பட்டினம் | 140 | திரு. S. சம்பந்தம்பிள்ளே, கீழப்பெரும்பள்ளம். |
| 24 | 5,000 | ஆக்கூர் | 145 | திரு. T. R. அகோரம் ஐயர், ஆக்கூர். |
| 25 | 10,000 | மாயூரம் | 285 | திரு. G. S. பிள்ளே (கேதாரம்பிள்ளே), பல்லவராயன்பேட்டை. |
| 26 | 7,000 | வைத்தீசுவரன்கோயில் | 200 | திரு. R. S. ராமையாபிள்ளே, பூங்குடி முதலியார் சத்திரம், வைத்தீசுவரன்கோயில். |
| 27 | 5,000 | சீர்காழி | 145 | திரு. வி. சுவேதாரண்யம் ஐயர், B. A., B. L., அட்வகேட், சீர்காழி. |
| 28 | 5,000 | ஆச்சாள்புரம் | 200 | திரு. S. நாகலிங்கம் செட்டியார், ஆச்சாள்புரம். |
| 29 | 20,000 | சிதம்பரம் | 150 | ஸ்ரீ காசிமடம், சிதம்பரம். |
| 30 | 3,000 | திருப்பாதிரிப்புலியூர் | 100 | திரு. V. P. சுப்பராய செட்டியார், திருப்பாதிரிப்புலியூர். |
| 31 | 5,000 | விருத்தாசலம் | 100 | ஸ்ரீ S. சாம்பசிவ குருக்கள், விருத்தாசலம். |

| | | | | |
|---|---|---|---|---|
| 32 | 5,000 | திருக்கோவலூர் | 140 | திரு. K. M. வேலாயுதம் பிள்ளை, கீழையூர், திருக்கோவலூர். |
| 33 | 7,000 | திருவண்ணாமலை | 265 | திரு. தி. ஷண்முகசுந்தர ஓதுவார், திருவண்ணாமலை. |
| 34 | 3,000 | திருமாகறல் | 150 | திரு. M. D. நடராச முதலியார், மானேஜிங் டிரஸ்டி, திருமாகறலீசுவரர் தேவஸ்தானம். |
| 35 | 7,000 | காஞ்சிபுரம் | 200 | திரு. க. சுப்பிரமணிய ஐயர் B. A., தியாகராஜ விலாசம், சென்னை. |
| 36 | 7,000 | திருக்கழுக்குன்றம் | 200 | டி. டி. டி. |
| 37 | 5,000 | சென்னை | 150 | சென்னபுரி அன்னதான சமாஜம், சென்னை. |
| 38 | 5,000 | திருவொற்றியூர் | 140 | திரு. க. சுப்பிரமணிய ஐயர் B. A., தியாகராஜ விலாசம், சென்னை. |
| 39 | 5,000 | வடதிருவாலங்காடு | 140 | திரு. மு. சபாபதி தேசிகர், வடதிருவாலங்காடு. |
| 40 | 7,000 | திருத்தணிகை | 200 | திரு. க. சுப்பிரமணிய ஐயர், B. A., தியாகராஜ விலாசம், சென்னை. |
| 41 | 7,000 | காளஹஸ்தி | 200 | டி. டி. டி. |
| 42 | 5,600 | பிரயாகை | 200 | ஜோஷிமடத்துச் சங்கராச்சாரிய சுவாமிகள் மடம். |
| 43 | 10,000 | வாரணாசி | 400 | ஸ்ரீ குமாரசுவாமி மடம், கேதாரகட்டம், வாரணாசி. |
| ... | ... | டி. | 500 | [சாதுக்களுக்குப் பண்டாரா] டி. டி. |
| 44 | 5,000 | டில்லி | 140 | திரு. K. பாலகிருஷ்ண ஐயர், ஸ்ரீ சுவாமிநாதசுவாமி சேவாசமாஜம், புதுடில்லி. |
| 45 | 8,500 | ஹரத்துவார் | 265 | போலாநாத் ஆச்சிரமம், ஹரத்துவார். |
| 46 | 7,000 | ரிஷிகேசம் | 200 | சிவாநந்த ஆச்சிரமம், ரிஷிகேசம். |
| 47 | 7,000 | திருக்கேதாரம் | 275 | ஸ்ரீ கணேஷ்சங்கர் வாஜ்பாய், கேதார்நாத்பண்டா, கேதார்நாத், இமயமலை. |
| கூடுதல் | 6,38,600 | | 13430 | |

உத்தரவுப்படி

வித்துவான் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்

ஜூனியர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

சிவ சிவ

Endowments created by His Holiness

# Silasri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal

Head of Sri Kasi Mutt, Tirupanandal

for feeding of Brahmins, Ascetics & the poor etc.,
on Sri Kumaragurupara Swamigal Maheswarapuja (Memorial) Day
from Rameswaram & Kanyakumari in the south of India to Kedarnath situated
at a height of 12,000 feet on the Himalayas in the north.

| Serial Number | Capital Rupees | Places where feeding is conducted | Amount Spent. Rs. | Names of persons who supervise the feeding |
|---|---|---|---|---|
| 1 | 10,000 | Rameswaram | 350 | Sri Kasi Mutt. Sannithi Street, Rameswaram. |
| 2 | 7,000 | Kanyakumari | 200 | Sri Kasi Mutt, Achiramam. |
| 3 | 5,000 | Tiruchendur | 140 | Sri T. M. Kumaraguruparan Pillai, B. A., B. L., Srivaikuntam. |
| 4 | 9,000 | Srivaikuntam | 275 | do do do |
| 5 | 5,000 | Tirunelveli | 140 | Sri C. S Arunachalam Pillai, Ganapathi Mills, Thazhaiyuthu. |
| 6 | 5,000 | Old Papanasam | 140 | Sri D. Maragathasubramanya Pillai, Ambasamudram. |
| 7 | 5,000 | Tirukkutralam | 190 | Sri T. M. Kumaraguruparan Pillai. B. A., B. L., Srivaikuntam. |
| 8 | 5,000 | Uttarakosamangai | 140 | Sri M. V. Ragavendra Rao, B. A., Dewan & Administrative Secretary, Ramnad Devasthanam, Ramanathapuram. |
| 9 | 5,000 | Tirupperunthurai | 140 | Sri S. Murugesam Pillai, Tiruloki. |
| 10 | 2,50,000 | Madurai (Kanyakumari etc. Charities) | 500 | Siva Dharmabhaskara Sivasri M. K. Sundaresa Bhattar, Madurai. |

| Serial Number | Rupees | is conducted | Spent. Rs. | Names of persons who supervise the feeding |
|---|---|---|---|---|
| 11 | 10,000 | Palani | 285 | Sri Sivakumara Swamigal, Sri Sadhu Swamigal Mutt. Palani. |
| 12 | 5,000 | Viralimalai | 140 | Sri T. Pattusami Oduwar, Tiruchirapalli. |
| 13 | 7,000 | Tiruvanaikka | 200 | do do do |
| 14 | 6,000 | Tiruvaiyaru | 190 | Sri Annasami Bhagavathar. Tiruvaiyaru. |
| 15 | 7,000 | Swamimalai | 200 | Sri N. R. Ramanujam B. A., Kumbakonam. |
| 16 | 5,000 | Tiruvidaimarudur | 140 | Dr. A. Sundaram L. I. M., Tiruvidaimarudur. |
| 17 | 1,00,000 | Tirupanandal | 4,000 | Sri Kasi Mutt, Tirupanandal. |
| 18 | 5,000 | Vedaranyam | 140 | Sri S. P. Venkatarama Iyer, Peri. Azha. Mu. Annasathiram, Vedaranyam. |
| 19 | 5,000 | Tiruppugalur | 200 | Sri N. M. Somasundaram Pillai, Tiruppugalur. |
| 20 | 7,000 | Tiruvarur | 200 | Sri T. Somaskantha Desigar, Tiruvarur. |
| 21 | 5,000 | ThiruNagaikaronam | 150 | Sri S. Subbiah Mudaliar. Athipuliyur. |
| 22 | 5,000 | Tirunallar | 140 | Sri Kuttiappa Pillai, Shroff. Sri Darbaranyeswarar Devasthanam, Tirunallar. |
| 23 | 5,000 | Kaveripoompattinam | 140 | Sri S. Sambandam Pillai, Keezhaperumballam. |
| 24 | 5,000 | Akkur | 145 | Sri T. R. Agoram Iyer, Akkur. |
| 25 | 10,000 | Mayuram | 285 | Sri G. S. Pillai (Kedaram Pillai). Pallavarayanpettai. |
| 26 | 7,000 | Vaitheeswarankoil | 200 | Sri R. S. Ramayya Pillai, Poongudi Mudaliar Choultry. Vaitheeswarankoil. |
| 27 | 5,000 | Sirkali | 145 | Sri V. Swetharanyam Iyer B. A., B. L., Advocate, Sirkali. |
| 28 | 5,000 | Achalpuram | 200 | Sri S. Nagalingam Chettiar. Achalpuram. |
| 29 | 20,000 | Chidambaram | 150 | Sri Kasi Mutt, Chidambaram. |
| 30 | 3,000 | Tirupathirippuliyur | 100 | Sri [illegible] P. Subbaraya Chettiar, Tirupathiripuliyur. |

| | | | | |
|---|---|---|---|---|
| 31 | 5,000 | Viththachalam | 100 | Sri S. Sambasiva Gurukkal, Vriththachalam. |
| 32 | 5.000 | Tirukkovalur | 140 | Sri K. M. Velayutham Pillai, Kilaiyur, Tirukkovalur. |
| 33 | 7.000 | Tiru Annamalai | 265 | Sri T. Shanmugasundara Othuvar, Thiruvannamalai. |
| 34 | 3,000 | Tirumagaral | 150 | Sri M. D. Nataraja Mudaliar, Managing Trustee, Magaraleeswarar Devasthanam. |
| 35 | 7.000 | Kanchipuram | 200 | Sri K. Subramanya Iyer B. A., Thiagaraja vilasam, Madras-5. |
| 36 | 7,000 | Tirukkazhukkunram | 200 | do do do |
| 37 | 5,000 | Madras | 150 | Chennapuri Annathana Samajam, Madras-5. |
| 38 | 5,000 | Tiruvotriyur | 140 | Sri K. Subramanya Iyer B. A., Thiagaraja vilasam, Madras-5. |
| 39 | 5.000 | Vada Tiruvalangadu | 140 | Sri M. Sabhapathi Desigar, Vada Tiruvalangadu. |
| 40 | 7.000 | Tiruthanigai | 200 | Sri K. Subramanya Iyer B. A., Thiagaraja vilasam, Madras-5. |
| 41 | 7,000 | Kalahasti | 200 | do do do |
| 42 | 5,600 | Prayag | 200 | Sankaracharya Swamigal Mutt of Joshi Mutt. |
| 43 | 10,000 | Varanasi | 400 | Sri Kumaraswami Mutt, Kedar Ghat, Varanasi.] |
| ... | ... | do | 500 | [SADHUS PANDARA] do do |
| 44 | 5,000 | Delhi | 140 | Sri K. Balakrishna Iyer B. A., Secretary. Sri Swaminathaswami Seva Samaj, New Delhi-16. |
| 45 | 8,500 | Haradwar | 265 | Bholanath Ashram, Haradwar. |
| 46 | 7,000 | Rishi Kesh | 200 | Sivanantha Ashram, Rishikesh. |
| 47 | 7,000 | Kedarnath | 275 | Shri Ganesh Shankar Vajapai, Kedarnath Panda, Kedarnath, Himalayas. |
| Total | 6,38,600 | | 13430 | |

By order of His Holiness

VIDWAN SP. MU[illegible] KUMARASWAM[illegible] [illegible]AMBIRAN

உ

SIVA SIVA

# Saint Kumara Gurupara Swamigal

Saint Kumaraguruparar was born at Srivaikuntam. He got the power of speech in his fifth year by the blessings of Sri Senthilandavan at Tiruchendur and sang Kandarkalivenba. He sang at Madurai in praise of Goddess Meenakshi, a Pillai Tamil and he was garlanded by the Goddess with a pearl necklace. At the request of King Tirumalai Naik, he then composed Neethineri vilakkam, a moral code for inculcating wisdom to mankind. At Dharmapuram he was initiated by Sri Masilamani Desikar in the saintly order of the Dharma puram Athinam and there he improvised Pandara Mum manikkovai in praise of that Pontiff. While he visited the holy shrines of Tiruvarur, Vaitheeswarankoil and Chidambaram, he sang Nanmanimalai, Pillai Tamil, and Mummanikkovai. He then went on pilgrimage to Benares where he improvised Sakalakalavallimalai in praise of the Goddess of Learning, and also sang Kasikkalambagam. He rode on a live lion when he interviewed the Padusha at Benares and the Padusha having been deeply and devoutly impressed by the greatness of the Swamigal very liberally helped the Saint in all his activities viz., erection of Kedarghat and Kedareeshwar Mandir on the west bank of the Ganges and founding a charitable institution nearby.

Blessed be the eyes that see the Cosmic Dance in the Golden Hall!
Blessed be the ears that hear the prowess of the Lord!
Blessed be the head that bows to Him!
Blessed be the mouth that sings in praise of Him!

(Chidambara Cheyyutkovai
—St. Kumara Guruparar)

In additon to the feeding conducted at 47 places from Cape Comorin to the Himalayas, Thevara Akanda Parayanam (continuous recital of Thevarams) is conducted on Sri Kumaragurupara Swamigal's day at Madurai for 24 hours from 6 A. M. on 5-6-56 at

உ

# ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால்

நிறுவப் பெற்ற நிதிகளின்படி

## “ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம் பாலிப்பு”

நடைபெறும் இடங்கள்



உ

திருச்சிற்றம்பலம்

மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டம் கொண்டான் காபாலீச் சுரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்(கு)
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய். —சம்பந்தர்

மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுதுசெய் வித்தல்
கண்ணினால் அவர்நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாம்எனில் உலகர்முன் வருகென உரைப்பார்.
—பெரியபுராணம்

படமாடக் கோயிற் பகவற்(கு) ஒன்றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க்(கு) ஒன்றீயில்
படமாடக் கோயிற் பகவற்க தாமே.

தண்டறு சிந்தை தபோதனர் தாம்மகிழ்ந்(து)
உண்டது மூன்று புவனமும் உண்டது
கொண்டது மூன்று புவனமும் கொண்டதென்(று)
எண்டிசை நந்தி எடுத்துரைத் தானே. —திருமூலர் திருமந்திரம்

சிவனை யர்ச்சனை செய்பவர்க்(கு) இசைவன செய்தோர்
அவனெ னக்குறித்(து) அடியரைப் பூசைசெய்(து)ஆறு
சுவைய இன்னமு(து) அருத்தினோர் தொண்டர்தம் பணியே
தவமெனப் புரிந்(து) உயர்ச்சியைச் சார்ந்தவர் இவர்காண்.
—திருவிளையாடற் புராணம்

பிரம சாரியைப் பேரறம் ஓங்கிடும்
கிரக சாரியை யூட்டிய கேண்மையர்
விரவி யேசிவ லோகம் விரும்பிய
பரம போக மனைத்தும் பயில்வரே. —சிவதருமோத்தரம்

திருச்சிற்றம்பலம்

## தேவார அகண்ட பாராயணம்

5-6-66 ல் காலை 6 மணி முதல் இரவு 8 மணி வரை மதுரை ஸ்ரீ மீனாட்சி அம்மன் கோவில் பொற்றாமரைக் கரையிலும், இரவு 8மணி முதல் மறுநாட் காலை 6 மணி வரை ஆவணி மூல வீதிகளிலும் ரூ. 1500/- செலவில் தேவார அகண்டபாராயணம் நடைபெறும்.



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ வீரியம்மன் கோவில் பங்குனி உத்திரப்பெருவிழா ஏழாம் திருநாள்
1–4–1966-ல் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஜூனியர் வித்துவான் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள் அவர்கள் ஸ்ரீ காசிமடம் காரியஸ்தர்களுடன்

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 17 | பராபவஞு வைகாசித் திங்கள் 1ம்உ [14-5-66] | இதழ் 5

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்
## உரை நடை

பாலகவி வயிநாகரம்,
திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

(மலர் 17. இதழ் 4-ன் தொடர்ச்சி)

### முத்தப் பருவம்

குருகு நாறு செந்தளிர்க்கைக்
கொடிநுண் ணுசுப்பிற் கோட்டிமயக்
குலப்பூங் கொம்பு நறவூழ்த்த
கொழுந்தா மரையோ டவிழ்ந்ததுழாய்ச்
சருகு நாறு முடைத்தலையின்
தாம நாறு திரடிண்டோட்
டாதை யாருங் கண்டுகண்டு
தடங்கண் களிப்பக் குரவுவிரிந்

தருகு நாறு திருமேனி
அந்தீங் குதலை மழலைகனிந்
தமுத முறு பசுந்தேறல்
அசும்பு நாறத் தெய்வமண
முருகு நாறுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. 42

வளையல்கள் விளங்குகின்ற செந்தளிர் போன்ற கைகளை யும் கொடியை ஒத்த நுண்ணிய இடையையும் உடைய உயர்ந்த இமயமலையில் உதித்த மேலான பூங்கொம்பு போன்ற பார்வதி தேவியும், தேன் சொரிகின்ற கொழுவிய தாமரையோடு கட்ட விழ்ந்த துழாய்ச் சருகு நாறுகின்ற பிரமன், திருமால் ஆகிய இருவரது முடைத்தலைகளைத் தொடுத்த மாலை விளங்குகின்ற திரண்ட திண்ணிய தோள்களையுடைய தந்தையாகிய சிவபெரு மானும் பார்த்துப் பார்த்து அகன்ற கண்கள் களிக்கும்படி, குராமலர் விரிந்து பக்கத்திலே மணம் திருமேனியில் அழகிய இனிய மழலைச் சொற்களிலிருந்து கனிந்து அமுதம் ஊறுகின்ற பசிய வாயூரலின் துளிகள் மணம் நாறத் தெய்வத் திருமணம் வீசுகின்ற செங்கனி வாயால் முத்தம் தருவாயாக! மும்மைத் தமிழையும் தேர்ந்த கந்தபுரி முருகனே! முத்தம் தருவாயாக.

நறவு விரிந்த விரைத்தோட்டு
நளினத் தொட்டிற் றடமுலைப்பால்
நல்கி வளர்த்த கைத்தாயர்
நகைவாண் முகத்து மார்பகத்தும்
குறுமென் னடைய சிறுபசுங்காற்
குருதி ததும்ப உதைந்துசில
குறும்பு செயத்தாள் நோமெனமென்
கோல்கொண் டோச்சப் பெரும்புவனம்
நிறுவு மொருநின் பெருந்தன்மை
நினைந்தாய் போலக் கனிந்தமுது
நெக்குப் பசுந்தேன் அசும்பூற
நெடுவெண் ணிலவு விரிந்தகுறு

முறுவல் அரும்பும் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே. 43

தேன் துளிக்கின்ற நறுமண இதழ்களை யுடைய தாமரைத் தொட்டிலில் பெரிய முலைப்பாலைக் கொடுத்த வளர்த்த செவிலித் தாயர்களாகிய கார்த்திகைப் பெண்களது நகைமிகுந்த ஒள்ளிய முகத்திலும் மார்பினிடத்திலும் குறிய மெல்லிய நடையை யுடைய சிறிய பசிய கால்களிற் குருதி ததும்பும்படி உதைந்து நீ சில குறும்புகள் செய்யக், கால்கள் நோகுமென்று அவர்கள் மெல்லிய கோல்கொண்டு அடிப்பார்போல ஓங்க, பெரியபுவனங் களைப் படைக்கின்ற ஒப்பற்ற உனது பெருந்தன்மையை நினைந்த வன்போல முற்றிய அமுதம் கனிந்து பசுந்தேன் துளிகள் ஊற நெடிய வெள்ளிய நிலவுபோல விரிந்த குறுமுறுவல் அரும்புகின்ற செங்கனிவாய் முத்தம் தருவாயாக. மும்மைத் தமிழையும் தேர்ந்த கந்தபுரி முருகனே! முத்தம் தருவாயாக.

பொழியுங் கருணைப் பெருவெள்ளப்
புணரி பெருகி அலையெறியப்
பொங்கி யெழுந்த பெருங்காதற்
புளகம் போர்ப்பப் போதுசெயும்
விழியும் மனமும் குளிர்தூங்க
விரிநீர்ச் சடிலத் தொருவனிரு
வீணைக் குதவும் திருச்செவிகள்
விருந்தாட் டயர விரைகொழித்து
வழியும் கொழுந்தேன் பிழிந்திட்டு
மதுர அமுது குழைத்தூற்றும்
மழலை ததும்பப் பழமறையை
வடித்துத் தெளித்த வார்த்தையொன்று
மொழியும் பவளச் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே. 44

பொழிகின்ற கருணையாகிய பெருவெள்ளத்தை யுடைய கடலானது பெருக்கெடுத்து அலை வீச, பொங்கி யெழுந்த

பெரிய காதலால் உரோம புளகம் திருமேனியைப் போர்க்க, பகலிரவுப் பொழுதுகளைச் செய்கின்ற சூரிய சந்திரர்களாகிய திருக்கண்களும் மனமும் குளிர்ச்சியடைய, விரிந்த கங்காநதி தங்கிய சடையையுடைய ஒப்பற்ற சிவபெருமானது வீணையொலி கேட்கின்ற இரண்டு திருச்செவிகள் விருந்தாட்டயரும்படி, நறு மணம் விசி வழிகின்ற கொழுவிய தேனைப் பிழிந்து இனிய அமுதைக் குழைத்து ஊற்றுகின்ற மழலை ததும்ப, பழய வேதங் களை வடித்துத் தெளித்த வார்த்தை யொன்று மொழிந்த பவளச் செங்கனி வாயினுல் முத்தந் தருவாயாக. மும்மைத் தமிழையும் தேர்ந்த கந்தபுரி முருகனே! முத்தந் தருவாயாக.

கலைப்பால் நிறைந்த முதுக்குறைவிற்
கல்விச் செல்வர் கேள்விநலம்
கனியக் கனிய அமுதூறும்
கடவுள் மறையும் முதற்சங்கத்
தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்
தண்டேன் நறையும் வடித்தெடுத்த
சாரம் கனிந்தூற் றிருந்தபசும்
தமிழும் நாறத் தடங்கரைகொல்
அலைப்பாய் புனற்றெண் கடல்வைப்பும்
அகிலாண் டமும்பன் முறையீன்றும்
அழகு முதிர முதிராவென்
அம்மை யமுது தூற்கொண்ட
முலைப்பால் நாறும் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே. 45

கலையின் பகுதிகள் நிறைந்த பேரறிவாளர்களாகிய கல்விச் செல்வர்களுக்குக் கேள்வி நலம் முதிர முதிர அமுதூறுவதாகிய கடவுள் தந்த வேதமும், முதற் சங்கத்துப் பெரும்பாவலர்களது இனிய சுவைக்கனியும் தண்ணிய நறுந்தேனும் வடித்தெடுத்த சாரம் கனிந்து ஊற்றெழுகின்ற பசிய தமிழும் மணக்கப்பெரிய கரையை உடைத்து அலைபாய்கின்ற நீரையுடைய தெள்ளிய கடல்சூழ்ந்த நிலவுலகத்தையும் அகில அண்டங்களையும் பல

முறை பெற்றும் அழகு முதிர ஆண்டு முதிராத எனது அம்மை யினது அமுதம் கருக்கொண்ட கொங்கைகளின் பால் நாறுகின்ற செங்கனிவாயால் முத்தம் தருவாயாக! மும்மைத் தமிழையும் தேர்ந்த கந்தபுரி முருகனே! முத்தம் தருவாயாக.

புயலுண் டிருண்ட கொந்தளமும்
பொன்னங் குழையும் இன்னகையும்
புளகம் பொதிந்த இளமுலையும்
புருவச் சிலையும் போர்த்தடங்கட்
கயலும் கலப மயிலியலும்
கன்னிப் புனத்தோர் பெண்ணமுதின்
காமர் நலனும் பன்னிரண்டு
கண்ணுல் முகந்துண் டின்னமுதின்
இயலும் சுவைநல் லவியொடும்நீத்
தேக்கற் றிருந்தத் தாக்கணங்கின்
இழுமென் குதலை கனிந்தூறும்
இதழ்த்தேன் சுவைகண் டேமாப்பான்
முயலுங் குமுதக் கனிவாயால்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே. 46

மேகத்தை உண்டு இருண்ட கூந்தலையும், பொன்னுலாகிய அழகிய குழைகளையும், இனிய புன்முறுவலையும், மேலோங்கி எழுந்த இளங் கொங்கைகளையும், புருவ வில்லையும், போர் செய் கின்ற அகன்ற கட்கயலையும், தோகையையுடைய மயிலின் இயலையும், அழகு நலத்தையும் கன்னிப் புனத்திலேயிருந்த ஒப் பற்ற பெண்ணமுதமாகிய வள்ளி நாச்சியாரிடம் பன்னிரண்டு கண்களாலும் முகந்துண்டு, இனிய அமுதத்தை ஒத்த சுவையை யுடைய தேவருணவையும் விட்டு ஆசையால் தாழ்ந்து அந்த முன்னிலை நங்கையின் இனிய மெல்லிய குதலை கனிந்தூறுகின்ற வாயிதழ்த் தேன் சுவையை நுகர்ந்து இன்புறும் பொருட்டு முயலுகின்ற செங்குமுதக் கனி வாயினுல் முத்தம் தருவாயாக! மும்மைத் தமிழையும் தேர்ந்த கந்தபுரி முருகனே! முத்தம் தருவாயாக,

(தொடரும்)

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

மலர் 17. இதழ் 4-ன் தொடர்ச்சி

## A Critique of Formal Religion
## The Six Faiths availeth not
## புறசமயக்குறைபாடு-அறுசமயங்களும் பயனில்லை

112. ஆயத்துள் நின்ற அறு சமயங்களும்
காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலர்;
மாயக்குழியில் விழுவர், மனைமக்கள்
பாசத்தில் உற்றுப் பதைக்கின்றவாறே.

The Six faiths severally Congregate,
yet, not one knoweth the God within;
Deep into the pit of illusion, their adherents drop,
And fastened hard by familial ties of bondage,
They shake and tremble, in vain impotence

மக்கள் கூட்டத்துள்ளே வழக்கில் நின்ற ஆறுசமயங்களுமே உடம்பினுள்ளே கோயில் கொண்ட உத்தமனைக் காண வல்லனவல்ல. அச்சமயவாதிகளெல்லாம் மயங்கி, பிறப்பெனும் குழியில் வீழ்ந்து, மனையென்றும் மக்களென்றும் உலகபாசத்தால் பிணிப்புண்டு, ஏதும் செய்வதற்கியலாது துன்பத்தில் துடிக்கின்றனர்.

## The Formal Faiths know not the God within

## அறுசமயங்களும் அகத்திறைவனை அறிந்தில

113. உள்ளத்துள்ளே தான் கரந்தெங்கும் நின்றவன்
வள்ளல் தலைவன் மலருறை மாதவன்
பொள்ளற் குரம்பைப் புகுந்து புறப்படும்
கள்ளத்தலைவன் கருத்தறியார்களே.




He hides in thine heart
Yet doth He pervade all;
He is the Munificient One;
The Lord Supreme;
Of austere penance
That is seated on the lotus of our hearts;
The cunning Master-Thief
In stealth entereth this hollow abode of human flesh
And then leaveth it;
None knoweth His deep design.

இறைவன் நம் உள்ளத்துள்ளே ஒளிந்து நிற்கின்றான்; எங்கும் கலந்தும் நிற்கின்றான். அவன்கருணை வள்ளல்; தலைவன்; நம் உள்ளமாகிய மலரில் உறையும் பெரும்தவத்தோன். நீரிற் குமிழிபோன்ற இந்த ஊனுடம்பினுள்ளே எவருமறியாது புகுகின்றான்; பின்னே உரியகாலத்தே வெளிச்செல்கின்றான். கள்வர்களுக்குத் தலைவன் செய்வது போன்றிருக்கின்றது, அவன் புகுவதும் போவதுமான நுட்பம். அவன் எண்ணம் யாரே அறிவர்!

## Existence of God is an act of Faith

## இறைவன் உண்டெனில் உண்டு; இல்லெனில் இல்லை

114. உள்ளத்து உள்ளன், புறத்துள்ளன் என்பவர்க்கு
உள்ளத்து உள்ளன் புறத்துள்ளன் எம்மிறை;
உள்ளத்துமில்லை புறத்தில்லை என்பவர்க்கு
உள்ளத்து மில்லை புறத்தில்லை தானே.

Say that the lord is within thee and without thee
Then sure my lord is within thee and without thee:
To them that they say that He is neither within thee
or without thee
Sure is He no where for them·

இறைவன் உள்ளத்திலும் இருக்கிறான், வெளியிலும் இருக்கிறான் என்று சொல்கிறவர்கட்கு அவன் அவ்வாறே இரண்டிடத்தும் தோன்றுவான். இரண்டிடத்தும் இல்லை என்பவர்கட்கு அவன் இல்லாதவனாகவே-அவர்கட்குத் தோன்றாதவனாகவே-ஆகிவிடுகிறான்.

## God is beyond all the formal Faiths

## இறைவன் அறுசமயமும் கடந்தவன்

115. ஆறுசமயமும் கண்டவர் கண்டிலர்
ஆறுசமயப் பொருளும் அவனலன்;
தேறுமின், தேறித்தெளிமின்; தெளிந்தபின்
மாறுதல் இன்றி மனைபுகலாமே.

They founded the Six Faiths,
Yet they found Him not;
What the Six Faiths talk of is not He;
Do thou thyself in faith seek Him,
And be resolved of doubts all;
And then sure shall thou enter thy Father's Mansion·

ஆறுசமயங்களை நிறுவினவர்களும் இறைவனைக் கண்டாரில்லை. அவ்வாறு சமயங்கள் விரிக்கும் பொருளும் அவனாயில்லை. அவனை உள்ளத்தே தேடுங்கள்; தேடித்தெளிவு பெறுங்கள்; பின்னே உறுதியாக விடுபெறலாம்.

---

(தொடரும்)

# ஆலவாய் என்னும் பெயர் வழக்கு

செஞ்சொற் கொண்டல்
வித்துவான். திரு. சொ. சிங்காரவேலன் அவர்கள், M. A.,
மொழியியல்துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

தாமரை:

செந்தமிழ்ச் சிறப்புடையது திருமதுரைத் திருநகர். 'தண்டமிழ் வேலித் தமிழ்நாட்டகம் எல்லாம், குன்றுதல் உண்டோ மதுரை கொடித்தேரான் குன்றம் உண்டாகும் அளவு' என்று பரிபாடல் கேட்கிறது. தமிழ்ச்சங்கம் முழங்கிய இத் தமிழ்த் திருநகரம் திருமாலின் உந்தியில் மலர்ந்த தாமரை; இம்மலரின் இதழ்கள் தெருக்கள்; இதழ்களின் நடுவணதாகிய பொகுட்டு, விண்ணிழி விமானத்தில் சோமசுந்தரப் பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் என்று பரிபாடல் பாடுகின்றது:

"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர்; பூவின்
இதழகத் தனைய தெருவம்; இதழகத்து
அரும்பொகுட்டனைத்தே அண்ணல்கோயில்"

புலக்கோவில்:

அறிவுத் தராசிலே எடையிட்டுப் பார்க்குங்கால் உலகமெல்லாம் ஒரு தட்டில்; மதுரை மறு தட்டில். ஆனால் ஏற்றமிகுந்த இந்தத் தெய்வத் திருநகரத் தட்டே தாழ்ந்தது என்பது மற்றொரு பரிபாடல் மதிப்பீடு:

"உலகம் ஒருநிறையாத் தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலால் தூக்க – உலகனைத்தும்
தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவன்
நான்மாடக் கூடல் நகர்"

---

*விசுவாவசு ஆண்டு தைத்திங்கள் "ஞானசம்பந்தம்" பத்திரிகையில் வெளிவந்துள்ள இக்கட்டுரை ஆசிரியர் அனுமதியுடன் பிரசுரிக்கப்படுகிறது.*

பலபெயர்கள்:

இத்தகு மதுரைத் தலத்திற்குப் பல பெயர்கள் புராணச் சிறப்புடன் வழங்குகின்றன. சிவபிரான் தமது சடைப்பிறை யிடத்து அமுதாகிய மதுவைத் தெளித்துப் புனிதப்படுத்தியதால் 'மதுரை'; நான்கு மேகங்களும் வருணனது ஆணையால் நான்கு மாடமாகக் கூடி நின்றமையால் 'நான்மாடக் கூடல்'; பாம்பு வட்டமாய் வாலை வாயாற் கவ்வி எல்லை காட்டியதால் 'ஆலவாய்'; கடம்பமரக் காடு அடர்ந்தமையால் 'கடம்பவனம்'; அன்னை பராசக்தி கன்னியாயிருந்து அருளாட்சி புரிந்தமையால் 'கன்னி புரிசம்'; சிவபிரான் தென்னவராக இருந்து ஆட்சி புரிந்த சிறப்பால் 'சிவராசதானி'; ஆன்மாக்களுக்குச் சரியை முதலிய நான்கையும் அளித்ததால் 'சமட்டிவிச்சாபுரம்'; சீவன் முத்தர்கள் வாழும் சிறப்பால் 'சிவன் முத்திபுரம்'; விராட் புரு டனுக்குப் பிரமரந்திரத்திற்கு மேல் பன்னிரண்டங்குலத்தில் இருப்பதால் 'துவாத சாந்தபுரம்'; வரகுண பாண்டியனுக்குச் சிவலோகம் காட்டியதால் 'சிவலோகம்'.

புராணத்திற் கூறப்பெறும் இப்பெயர்கள் அனைத்தினுள் ளும் 'ஆலவாய்' என்னும் பெயர் பற்றிய சிந்தனையே இங்கு கருதத்தக்கது.

ஆலவாய்: புராண விளக்கம்:

திருவிளையாடற் புராணத்துத் திருவாலவாயான படலம், பாம்பு வாலை வாயாற் கவ்வி மதுரைத் திருநகரின் எல்லையை வட்ட மிட்டுக் காட்டியதாலேயே 'ஆலவாய்' என்ற பெயர் வழங்க லாயிற்று எனக் கூறுகின்றது. இதன்படி மதுரைத் திருநகர முழுதுக்குமே 'ஆலவாய்' என்ற பெயர் பொருந்துகின்றது. சங்கப் புலவரிலே 'மதுரைப் பேரால வாயார்' என்றொரு புலவர் காணப்படுகின்றார். 'கூடல் ஆலவாயிலாய்' என்பது திருஞான சம்பந்தர் திருவாக்கு. இவற்றை நோக்கக் 'கூடல்' என்பது தலப்பெயராகவும், 'ஆலவாய்' என்பது கோயிற் பெயராகவும் கொள்ளத்தக்கன என்பாரும் உண்டு.

நாயன்மார் காலத்தில்:

திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் போந்து வழி பட்ட கி. பி. 6-ம் நூற்றாண்டில் 'ஆலவாயில்' என்பதும் வழங்கி

வந்தது என்பது அவ்விரு அருளாளர்களும் பாடியுள்ள திருப் பாட்டுக்களால் அறியக் கிடக்கிறது.

திருஞானசம்பந்தர் திருவாக்கில் 'ஆலவாயான்' 'ஆலவாயி லான்' 'ஆலவாயிலார்' 'ஆலவாயாரன்' என்ற தொடர்களும் 'ஆலவாய்' என்ற சொல்லும், பயின்று வருகின்றன. மற்றும், 'ஆலவாயிலாய்' என்றும், ஆலவாயில் உறையும் எம்மாதியே' என்றும் அச்சான்றோரே பாடுகின்றார்.

திருநாவுக்கரசர் திருப்பாட்டில், 'ஆலவாயில் அப்பனே அருள் செய்யாயே' என்றும், 'தென்கூடல் திருவாலவாய்' என்றும், வரும் தொடர்களைக் காணலாம். மாணிக்கவாசகர் திருவாக்கில் 'கூடல்' 'மதுரை' என்ற சொற்களே பெரும்பங்கு பெறுகின்றன.

'ஆலவாய்' 'ஆலவாயில்' என்ற இருபெயர்களுமே இவ் விரு நாயன்மார்கள் காலத்து வழங்கினவோ என்று எண்ண இடந்தருகின்றன இவர்களது திருவாக்குகள்.

### திருமுகப்பாசுரம் :

பதினோராம் திருமுறைத் திருமுகப்பாசுரத்து வரும் 'ஆல வாயின் மன்னிய சிவன்யான்' என்ற தொடரை இருவகையினும் பிரித்துப் பொருள் காணலாம். அவ்வாறு அத்தொடர் அமைந் திருத்தலை நாம் அறிய இயலுகின்றது.

### "ஆல மரத்தின் கீழ்":

இனி, 'ஆலவாய்' என்பது 'ஆலமரத்தின் கீழ்' என்ற பொருள் படும் என்றும், 'ஆலவாயில் அப்பனே' என்ற அப்பரடி களின் தொடர் ஆலமரத்தின் கீழ் எழுந்தருளியுள்ள இறைவனே' என்ற பொருள் உடையது என்றும் கருதுவர் பலர். ஆல மரங்கள் நிறைந்து தோன்றியமையின், "ஆலவாய்" (கடம்ப மரங்கள் - கடம்பவனம்) என மதுரை அழைக்கப் பெற்றதென் றும் கருதலாம்; மருத மரங்கள் செறிந்திருந்தமையின் 'மருதந் துறை' என அழைக்கப்பெற்றுப் பின்னர் அதுவே 'மருதை' மதுரை என்றாயிற்றாகலாம் என்ற கருத்தும் இங்குச் சிந்தித்தற் குரியது.

'ஆலவாயில் அப்பர் விளக்கம்:'

'ஆலவாயில்' என்றே வழங்குவது தம்திருவுள்ளம் ஆதலை அப்பரடிகள் தம் அடைவுத் திருத்தாண்டகத்தில்,

"கடுவாயர் தமைநீக்கி யென்னை யாட்கொள்
கண்ணுதலோன் நண்ணுமிடம் அண்ணல்வாயில்
நெடுவாயில் நிறைவயல்சூழ் நெய்தல்வாயில்
நிகழ்முல்லை வாயிலொடு ஞாழல்வாயில்
மடுவார் தென் மதுரைநகர் ஆலவாயில்
மறிகடல்சூழ் புனவாயில் மாட நீடு
குடவாயில் குணவாயில் ஆனவெல்லாம்
புகுவாரைக் கொடுவினைகள் கூடாவன்றே"

எனப் பல 'வாயில்'களோடு இணைத்துக் கூறுதலால் அறியலாம். இங்கு 'மதுரை நகர்' ஆலவாயில்' என்று அடைமொழி புணர்த்து அடிகள் உரைப்பதால் அதுமதுரையாகிய ஆலவாயையே குறிப்ப தாதல் தெளிவு. வேறொன்றைக் குறியாது கூடல்மா நகரைக் குறிப்பதற்காகவே அவ்வடைமொழி கொடுக்கப்பட்டதாதல் சிந்திப்பின் விளங்கும். எனவே 'ஆலவாயில்' என்பதனைப் புராண விளக்கம் வேருகக் கூறினும், அப்பரடிகள் காலத்தே அஃது அங்ஙனம் வழங்காமை தெளிவாகும். அன்றியும் இவ் வடைவு திருத்தாண்டகத்தில் கூறப்பட்டுள்ள ஏனைய 'வாயில்' களையும் இணைத்து நோக்க, இஃது இயற்கையமைப்பின் இயன்ற பெயராதலும் விளங்கும்.

நெய்தல் வாயில், ஞாழல்வாயில், குடவாயில் முல்லை வாயில், குணவாயில், நெடுவாயில், அண்ணல்வாயில் என்னும் அனைத்தினுள்ளும் இதனைக்காணலாம். இவ்வாறே 'ஆலவாயில்' என்பதும் ஆலமரச் செறிவை அடிப்படியாகக் கொண்டதாகலாம் என்பது தவருகாது அன்ருே? (இதனை 'வேதியா வேதகீதா' (599) என்ற திருப்பாடற்கமைந்த தருமையாதீன உரைப்பகுதி இனிது எடுத்து விளக்கியிருத்தல் இவ்விடத்து அறிந்து மகிழத் தக்கது ஆகும்.) ஆதலின், ஆலவாய், ஆலவாயில்' என்னும் இரண்டு பெயர் வழக்குகளும் பண்டு முதல் உண்மையும் அவை புராண காலத்தின் விளக்கத்திற்கு முற்பட்டுத் தோன்றிய பொருட்சிறப்புடையன என்பதும் தெளிவாகும்.

# உடலும் உயிரும்

வித்துவான் பெ. கு. வரதராசன் அவர்கள், M. A.,
பொத்தனூர் சேலம் Dt.

உடல், தசை – தசைநார்கள் – எலும்பு – இரத்தம் – தோல் ஆகிய தாதுக்களால் உயிருக்கு இடனாக இருப்பது என்பர் உடற்கூற்று வல்லுநர்கள். உயிர் தங்கி தான் முன் ஆற்றிய வினைக்கேற்றபயனைத் துய்க்க ஏதுவாய் அமைந்த வீடே உடல் என்பர் வேதவிற்பனர். ஆண்டவனின் அருளைப்பெற உயிர்பெற்ற பேறுதான் உடல் என்பர் சமயவாதிகள். எல்லாருடைய கருத்திலும் ஒன்றி நிற்கும் உண்மை 'உடல் உயிருக்கு இடமாயிற்றென்பதாம்'.

உடலை ஓம்புதல் வேண்டுமென்பார் ஒருசாரார். "காயமே யிதுபொய்யடா மெய்க்காற்றடைத்த பையடா" என இழித்துக் கூறி அதனை வெறுக்கவும் தூண்டுகின்றனர் ஒரு சாரார். பசு–பதி–பாசம் என்ற முச்சொல்லை நிலைக்களமாக்கி சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றை விளக்குகிறது சித்தாந்தம். இவ்வெல்லாக் கருத்துக்களையும் நோக்குங்கால் தெளிந்து கற்றவருக்குங்கூட ஏதோ ஒரு மயக்க உணர்வு காரணமாக உடலைப் பற்றிக் கூறுங்கால் பிதற்றும் நிலையே பெறுகின்றனர்.

'குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு'

என்ற குறள் உடம்பிற்கும் உயிருக்குமிடையே உள்ள தொடர்பினை விளக்குகிறது. பறவை கூட்டை விட்டு வெளியேறின் கூடு வெற்றிடமாகி பயனற்ற தாகி விடுகிறது. சென்ற பறவை மீண்டும் இக்கூட்டிற்கே வாராதொழியும். வருதலும் உண்டன்றோ? எவ்வாற்றானும் பறவை யிருக்கும் வரை கூடு இன்றியமையாதது தானே! பறவை தங்கி, வாழ்ந்து, தன் இனத்தைப்

பெருக்கி, அதனைப் பாதுகாத்து, அவற்றிற்குத் தான் பயனுகும் வரை.

'பொருளுக்கு இடனுகச் செய்யுள்-உயிருக்கு இடனுக உடல்' எனத் தொல்காப்பியனுரும் நன்னூலாரும் வலிந்து கூறுதல் உணர்தற்குரியது. "உடம்பார் அழியில் உயிரார் அழிவர்" என்ற திருமூலர் வாக்கால் உயிரழியாதிருக்க உடல் அழியாதிருக்க வேண்டும் என்ற உண்மை வெளிப்படுகிற தன்ருே? யாரேனும் உயிரை அழித்துக் கொள்ள விரும்புவா ருண்டோ? இலட்ச ருபாய்க்குத் தன் உயிரை ஆயுள் பாதுகாப்பு நிதிக்கு (Insurance) ஈடாக்கியிருந்தாலும் செல்வத்தைத் தன் குடும்பத்தார் துய்க்கட்டுமே என உயிர்விட முன்வருவார்களோ? இல்லை. அவ்வாறு எவரும் முன்வாரார். ஆகவே உயிரை இழக்க எவரும் விரும்பார். உடல் வேண்டுவதாயிற்று. உயிர் வாழ உடலைப் பேணவும் வேண்டுமென்பது உறுதியாயிற்று. இப்போது உடலையே இங்கு பேச விடுவோம். உடல்பேச உயிர் வேண்டுமே. உடலைப் பற்றிப் பேசவும் அதனை இயக்கித் தன தாக்கிக் கொள்ளவும் உரிமையுடையது உயிரே. இதனைப் 'பசு' அல்லது 'ஆத்மா' என்பர் சமய வாதிகள். இந்த உயிர் செய்த வினைக்கு ஏற்ற உடலைப் பெறுகிறது.

ஒரு அலுவலகத்தில் (Office) சிப்பந்தியாகப் (Peon) பணிபுரிபவன் வேற்றூருக்கு மாற்றப்பட்டால் அங்கு அவனுக் காகக் காத்திருக்கும் நிலையும் அதுவேதானே! அவன் கற்றுத் தேர்ந்து மேலதிகாரிகளின் நன்மதிப்பைப் பெற்றிருந்தால் அவனுக்குப்பதவி உயர்வு கிட்டும். செல்லுமிடத்தில் வரவேற் கும் உயர்ந்த பதவி அவனுக்குக் காத்திருக்கும். மாறுதலாகி வருபவர் மாவட்டத் தண்டல் நாயகராக (District Collector) இருந்தால் அந்த அலுவல ஊழியர்களும் (Clerks) பணியாளர் களும் (Peons) எதிர் கொண்டழைத்து வருவர். அவருக்கு எனத்தனியறை ஒய்வு அறை பணியாள் எல்லாம் முன்கூட்டி ஏற்பாடாகியிருக்கும். அவ்வாறின்றி அவ்வலுவலக எழுத்தர் (Clerk) என்ருல் எதிர் கொண்டழைத்து எல்லா நலன்களும் செய்பவர் எவர்? இது போன்றுதான் உயிர் பெறும் உடலு மாகும். உயிர்செய்த வினைக்கேற்ப அதற்கு உடல் காத்து நிற்கும்.

மண்ணின் வளம் ஒரே தன்மையுடையதானுலும் வித்திற் கேற்ற பயனைத்தானே தருகிறது. கரும்பு பயிராகும் அதே நிலத்தில் மிளகாய், வேம்பு, புளி இவற்றின் வித்துக்களை யிட்டோமானுல் அவை வளர்ந்தபின் தரும்பயன் முறையே கார்ப்பும் புளிப்புமாய் இருக்கின்றதை நாம் கண்கூடாகக் காண்கின்ருேம். அதுபோல உயிர் ஒரே தன்மைத்தாயினும் அதனதன் வினையால் உயர்வு தாழ்வுகளையடைகின்றது. இது அனுமானம். அவ்வுயிரிருந்து வினையாற்ற உடல் வேண்டும். உயிருக்குக் குடியிருப்பு வீடு. ஐம்புலன்களாகிய உணர்வு வழி. தீயவற்றை வெளியேற்றத் தனிவழிகள். நடமாடும் இயல்பு உடையது. இத்தகைய வீட்டைப் பெற்ற உயிர் வீடு கொடுத்த வனுக்கு ஏதாவது குடிகூலி தருதல் வேண்டாவோ? வேண்டாம். நன்றி மறவாது உதவியவனை எண்ணிப் பார்க்கவாவது வேண் டுமே! எண்ணிப் பார்த்துத் தான் ஏதும் செய்தல் வேண்டா. தான் பெற்ற வீட்டாலேயே அவனுக்கு நன்றி செய்தல் சாலும்.

அவனை நினைத்தல். அவனைத் துதித்தல். அவனைத் தேடிச் செல்லுதல். சென்றவிடத்தில் கண்டு கண்ணீர் மல்கிப் பாடுதல். எற்றுக்கு? வீடு பெற்ற உயிர் வீடு பெறுதற்கு. இப்பேறு வேறு எவ்வுடலுக்கும் கிட்டா. மனித உடலுக்கு மட்டுமே. "மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மானிலத்தே" என்ற அப்பர் திருவாக்கு இதனை வலியுறுத்துதலை ஓர்க. உடம்பினை வளர்க்க – பாதுகாத்துப் பேண உயிரும் உடலைப் பற்றி உள் நின்ருெளிரும். "உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" எல்லார்க்கும் மூலனும் அவனது வாக்கு. இதோ உங்கள் மயக் கத்தைப் போக்கித் தெளிவுபடுத்துகிருன்.

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே.

---

# உன்னையே பாடும்!

திரு. ஆ. துரை அவர்கள்,
வித்துவான், முதனிலை, செந்தமிழ்க் கல்லூரி, பனசை.

நறுமணத்தை வீசுகின்ற மலரும்
நல்லிசையைப் பொழிகின்ற குயிலும் — இந்தப்
பெருவெளியைப் படைத்தவனைக் கூறும்!
பேரருளைத் தலைவணங்கிப் போற்றும்!!

நதியினிலே திரிகின்ற அலையும்
நாணலிலே உரசிவருங் காற்றும் — நல்ல
சுதியிழைத்த தூயவனைப் பாடும்!
சக்தியினைத் தலைவணங்கி ஆடும்!!

ஒளிசிந்தித் தவழ்கின்ற நிலவும்
உன்னருளைப் பொழிகின்ற முகிலும் — வானில்
துளிபோதும் நில்லாமல் உன்னைத்
தேடியலை கின்றதுதான் என்னே!!

அரணெனவே நிற்கின்ற குன்றும்
அதனருகில் தவழ்கின்ற நதியும் — உன்றன்
திறம்பாடிச் சிரமதனைத் தாழ்த்தும்!
திருவருளை என்றென்றும் வாழ்த்தும்!!

# பராபவ ஆண்டு நிகழும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதிகுமரகுருபர சுவாமிகளின்

## குருபூசை விழாவிற்கு

### பேராசிரியர் இ. எஸ். வரதராஜய்யர் பாடிய வாழ்த்து

1- பூவார் ஸ்ரீவைகுண்டப் பொன்பதியில் அவதரித்துப் புகழ்சால் கல்வி
மேவாநின் றுயர்கேள்விச் செல்வனென விளங்கியுயர் சைவம்வாழ
ஓவாமல் உழைத்துயர்ந்து காசிமடம் நிறுவிநின்ற உரவோன் செய்ய
பாவாணர் புகழ்ந்தேத்தும் குமரகுருபரன் புகழைப் பாடுவோமே

2. ஐந்தகவை வரைமூங்கை யெனவிருந்து பலர்கவல அமர்ந்த ஐயன்
செந்திலுறை அறுமுகவன் திருவருளால் வாக்குவளம் செறியப்பெற்றுச்
சந்ததமும் தமிழ்வாழச் சிவம்வாழப் பனசைமடம் தந்துயர்ந்தான்
அந்தமிகு குமரகுரு பரமுனிவன் அவன் சீரை அறைகுவோமே.

3. சொல்லாரும் புகழ்ப்பனசை யுயர்காசி மடத்திறைமை சூழக் கல்வி
எல்லார்க்கும் எழுமையினும் உதவுமெனும் அறவுரையை யியம்பக் கேட்டு
நல்லார்வ முடனறிவு வளரவுயர் தமிழ்நூல்கள் தந்த சீலன்
பல்லாரும் புகழ்ந்தேத்தும் அருணந்தி முனிவனெனும் படிமத் தோனே

4. சிவத்தினுயர் தெய்வமில்லை சிவநெறியே தவநெறியென் றினிதி னோர்ந்து
பவமகற்றும் உமைபாகன் தளிபலவில் குடமுழுக்குப் பரிந்து செய்து
தவப்பனுவல் எனப்போற்றும் தமிழ்மறையைத் தளிச்சுவரில் தயங்கத் தீட்டி
நவம் நவமாய் அறப்பணிகள் பலபுரிந்தான் அருணந்தி நல்லோனம்மா

5. இசையாளர் எனப்பகரும் மறையோது வார்களரும் இடும்பை நீங்கி
யசையாத ஊக்கமொடும் மறைபரப்பற் கானவெலாம் அருளின் ஈந்து
திசையார்கள் புகழ்ந்தேத்தப் பொன்னுடை புரிந்துதவிச் சிறப்புப் பெற்றேன்
வசையாது மில்லாத அருணந்தி யெனப் புகழும் வள்ள லன்றே

6. வறியாருக் குணவளித்தோர் உயிர்ந்தோர் எனுமுரையை மனத்துட் கொண்டு
மறியாரும் கரத்தனடி மறவாத பத்தருக்கும் மறைப்பா வாணர்
நெறியாளர் எனுமிவர்க்கும் தலந்தோறும் அறச்சாலை நிறுவிநின்றோன்
வெறியாரும் கடுக்கையணி யரற்கன்பன் அருணந்தி விமல னம்மா

7. பொற்பாரும் உயர்கல்வி பெருமையினும் உதவுவதைப் புந்தி கொண்டே
அற்பாரும் உளத்தோடும் அருந்தமிழும் சிவநெறியும் அகிலத் தோங்க
நற்பாவ லவருய்யப் பன்னூல்கள் அச்சேற நல்கி நின்றோன்
இப்பாரில் தருவென்ன அறிஞர் சொலும் அருணந்தி ஏந்தலம்மா

8. முத்திதரும் காசிமுதல் முனைக்குமரி வரையிலுள முதிர்ந்த ஞான
பத்தருக்கும் ஆதுலர்க்கும் பாவலர்க்கும் நாவலர்க்கும் பரிவினூட்டச்
சுத்தமனத் தோடினிய வறச்சாலை பலவகுத்த தூயோ னிடும்
இத்தரணித் தேனுவென அறிஞர் புகழ் அருணந்தி யேதிவேந்தம்மா

9. பல்லாரும் புகழ்பனசை வளர்காசி மடமதனைப் பாலித் தாளும்
வல்லாளன் பெருங்கொடையன் வரிசையறிந்துதவவலான் மழுமான் கையன்
அல்லாரும் கண்டனடி யநவரதம் போற்றுபவன் அருள்சேர் நெஞ்சன்
நல்லார்கள் புகழ்ந்தேத்தும் அருணந்தி பல்லாண்டு தழைத்துவாழி

10. பேராலயங்கடோறும் திருமுறையைச் சுடர்க்கல்லிற் பிறங்கத்தீட்டி
நேராக ஒலிபெருக்கி பலவமைத்துச் சிவநெறியும் தமிழும் ஓங்க
ஏரான நிதியமழை எழிலியெனப் பொழியுமரு ணந்தி யென்னும்
பேராளன் இறையருளால் பல்லாண்டு வாழ்க வருள் பெருகமாதோ

11. திருப்பாட்டை புலகெங்கும் பரப்புமுறை தெரிந்தரன்சீர் தெளிந்தோர்க் கென்றும்
விருப்பாக்கும் ஒலிபரப்பி தளிதோறும் பலவமைத்து விமலை பங்கன்
இருப்பாரும் ஆலயங்கள் பலபுதுக்கிக் கவிவாணர்க் கியைவ வீயும்
தருப்பாருக் கென வறிஞர் புகழ்பாடும் அருணந்திச் சான்றோன் வாழி

12. வீதியில் மகர தோரணத் துடனே
விதவிதக் கோலங்கள் மிளிர
விழுமிய அடியார் நிரைணி பவராய்
மிருதுா கலத்துடன் விளங்க

நாதமார் ஏழில் பயில்பவர் நாத
சுரவிசை செவியிடம் கொள்ள
நன்றுறப் பயின்ற ஓதுவார் பாடும்
தவத்திரு முறைபல முழங்க
ஓதுறும் ஆறு சுவைதரும் உணவை
உணுமடியவர் மகிழ்கூர
உருகிடு முளத்தோ டுயரருணந்தி
மணியணிந் தொளிர்தரு கரத்தில்
போதுகள் கொண்டு தமிழ்மறை பாடிப்
பொருவிலா நூல்பல தந்த
புலமையார் குமர குருபரற் காற்றும்
பூசையின் மாட்சியார் புகல்வார்

13. பெய்யும் முகிலிற் பெரும்பொன் பொழிந்துநின்று
துய்ய தமி ழும்சைவத் தூநெறியும் - உய்யும் வகை
ஆற்றிநிற்கும் செம்மல் அருணந்தி யைப்பலவாய்ப்
போற்றிடுவோம் நாளும் புகழ்ந்து

14. அந்நாள் குறுமுனி பண்செய்த தெய்வ வருந்தமிழில்
நன்னு வலர்புகழ் நூல்பல தந்துதக் கார்க்களித்துத்
தென்னுட் டறம்வளர் செல்வன் அருணந்திச் செம்மறனைக்
கன்னுவ தார னெனச்சொலு மேயிந்தக் காசினியே

15. காவி யுடையும் திருநீறு கொள்திட காத்திரமும்
மாவிக்கி னங்களும் போக்கிடும் கண்மணி மாலைகளும்
ஓவில் நடத்தன் அடிபோற்றும் நெஞ்சும் ஒருங்கியைந்து
பூவிற் றருவென வாழரு ணந்தியைப் போற்றுமினே

16. பூவார் பனசைப் புரிமடத்தைக் காத்தளித்துப்
பாவாணர் கட்கும் பசுந்தமிழ்க்கும் - ஓ்வாமல்
ஈத்துவக்கும் வீரன் எழிலார் அருணந்தி
யாத்தபுகழ் யாத்தார்கள் யார்

---

# தாயுமானவரின் — பராபரக்கண்ணிகள்

Couplets in venerable adoration of the
Omnipotent and Omnipresent
sung by
St. THAYUMANAVAR

29

The Methods of worship vary as the religion varies. Some religions permit diverse kinds worship to suit every individual as to their mental development. In saivism it is unique, in allowing each and every body to worship the Lord in his own way and form. It admits the mental worship for those who have attained perpect maturity, and the ritualistic way of worship for those who are in lower mental strata. In the following song we see the high, civilized, and unfettered form of mental worship which will not have any criticism from anywhere.

நெஞ்சகமே கோவில் நினைவே சுகந்தம் அன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே!

(பொ—ரை) என் மனமே கோயில்; என் சிந்தனையே நறுமணப் பொருள்; என் அன்பே திருமஞ்சன நீர்; இறைவனே எனது பூசையை ஏற்றருள்வீர்!

Oh......Lord Supreme. Accept please my worship which springs from my immaculate heart which is the temple; thought being incense and love the holi water.

———

(தொடரும்)

Translated by Sri. K. PALANISAMY, M.A., Lecturer in Tamil, Sri. K. G. S. Art's College, Arulnandi Nagar.

# திருக்கழுக்குன்றம்

தேவாரமணி,
திரு. சட்டையப்பன் அவர்கள்

---

**இருப்பிடம் :**

செங்கற்பட்டுப் புகைவண்டி நிலையத்திலிருந்து சிற்பச் சிறப்பு வாய்ந்த மகாபலிபுரம் பதினெட்டுக்கற்றெலைவு. அதற்கு இடையில் ஒன்பதாவது கல்லில் இருக்கிறது இத்தலம். இது தொண்டை நன்னாட்டுத் தலங்கள் முப்பத்திரண்டுனுள், இருபத்தெட்டாவது தலமாக விளங்குவதாகும்.

**பெயர்க்காரணம் :**

கழுகுகள் வழிபாடுசெய்து பேறடைந்ததால் 'கழுகுகுன்றம், கழுக்குன்றம்' என வழங்கலாயிற்று. தல வரலாற்றுப்படி முதல்யுகமான கிருத யுகத்திலே சண்டன் - பிரசண்டன் என்ற கழுகுகளும், இரண்டாம் யுகமான திரேதா யுகத்திலே சம்பாதி-சடாயு என்ற கழுகுகளும், மூன்றும் யுகமான துவாபர யுகத்திலே சம்புகுத்தன் - மாகுத்தன் என்னும் கழுகுகளும் வழிபட்டுப் பேறடைந்தன வென்பது அறிய முடிகின்றது. இக் கலியுகத்திலே சம்பு - ஆதி என்ற இரண்டு கழுகுகள் வழிபடுகின்றன.

சிவபெருமானைப் பூசித்த வேதங்கள், அவனடிக்கிழ் நிலை பெற நிற்க வரம் கேட்ட காலை பெருமானும் அவ்வாறே அருள் செய்தார். அதனுல் 'வேதகிரி' என்னும் பெயரும் இத்தலத்துக்கு வழங்குவதாயிற்று. அடுத்து 'கதலி வனம்' என்ற பெயரும் இத்தலத்துக்குண்டு. இத்தலத்து விருட்சம் வாழை.

"தூயகதலி வனமீதெனத் தொல்லைநாள் போய
பழமை புதுக்குவார்"

என்பது திருக்கழுக்குன்ற உலா,

இன்றும் விழா நாளில் ஐந்தாம் நாளில் பகற்பொழுதில் வாழைவிருட்ச வாகனம் இத்தலத்தில் வைத்துச் சிறப்பிக்கப் பெறுகின்றது.

ஞானசம்பந்தர் :

இடைச்சுரமென்னும் தலத்தை வணங்கிய பின் திருத் தொண்டர்களுடன் இத்தலத்துக்கு வருகின்ருர் ஞானசம்பந்தர். திருமலையை வலம் வந்து சிந்தை களிகூறச் செஞ்சடைப் பெருமானை வணங்குகின்ருர். நள்ளிரவிலே - இருளிலே நடமாடுவதற்குரியதான காட்டையுடை நம்பன் 'காதலிக்கும் இடம் கழுக்குன்றம்' என்று நயம்படப்பாடத் தொடங்குகின்ருர். எப்படிப் பாடுகின்ருர் ?

" தோடு " எனத் துவங்குகின்ருர் !

சிவபெருமானின் திருச்செவியைக் குறிக்கும் 'தோடு' என்ற சொல்லை வைத்துத் துவங்கும் பதிகங்கள் மூன்று என்பதும், அவை 'தோடுடைய செவியன்' என்ற காழிப்பதிகமும், 'தோடொர்காதினன் என்ற இடைமருதுப்பதிகமும், 'தோடுடையான் ஒருகாதில்' என்ற கழுக்குன்றப்பதிகமும் ஆகும் என்பதும் குறிப்பிடத்தக்கது.

"தோடுடையானெரு காதில்தூய குழைதாழ
ஏடுடையான் தலைகலனக இரந்துண்ணும்
நாடுடையான் நள்ளிருள்ஏம நடமாடும்
காடுடையான் காதல்செய்கோயில் கழுக்குன்றே"

இறைவனது அடையாளங்களை யெல்லாம் இப்பதிகத்தினுட் காட்டி அப்பெருமான் காதலிக்கும் இடம் கழுக்குன்றம் என்று பாடுகின்ருர். கயிலையைத் தூக்கிய இராவணனைக் கலங்கச் செய்தவன், உமையை ஒருபாகத்து வைத்துக் காதல் செய்தவன், அவன்-அப்படிப்பட்ட இறைவன் காதல் செய்வது கழுக்குன்றம் என்று இன்னேரன்ன நயங்களை யெல்லாம் அழகு ஒழுகப்பாடுகின்ருர். இப்பதிகத்தினைப்பண்ணியல் பால் பாடிய ஞானபோனகரின் அருள்மனம் பெருவேளூர் என்னும் பதியினை வணங்கிப் பாடுங்கால் "அன்ருவுங் கழுக்குன்றும் ஆயமலை அவை வாழ்வார்" என்று கூறிமகிழ்கின்றது. அடுத்து அவர் பாடியருளிய

க்ஷேத்திரக்கோவையில் 'கண்ணுர் கழுக்குன்றம்' என்று குறிப் பிடுகின்ருர்.

**திருநாவுக்கரசர்:**

காஞ்சியம்பதியை வணங்கிப் பாடியபின் கழுக்குன்றத் திறையவனைக் கண்குளிரக் கண்டு பாடுகின்ருர். நாவரசப்பெரு மான் பாடிய இத் தலப்பதிகத்திலே இரண்டே திருத்தாண்டகப் பாடல்களே நமக்கு இன்று கிடைத்திருக்கின்றன. அதில் 'மூவிலைவேற்கையானை' என்பதொன்று. 'பல்லாடுதலை' என்பது மற்ருென்று. இந்த இரண்டு பாடல்களிலும் 'கற்பகத்தைக் கண்ணுரக் கண்டேன் நானே' என்று இறுதியடியை முடிக்கின் ருர். இந்த அடியையே இறுதியாக அருளிய இடம் மற் ருென்று. அது 'கற்குடிப்பதிகம்' அது

'கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணுரக் கண்டேன் நானே' என்பதாகும்.

'கற்றவர்க்கோர் கற்பகமாய் நின்ருய் நீயே' என அப்பர் பெருமான் ஐயாறனைப் போற்றுவதும், இறைவன் தமக்கு அநு பவப் பொருளாயின அருமையை அருளும் போது "கற்பகமே யானுன்னை விடுவேனல்லேன்" என உறைப்புக் கொள்ளும் போதும் 'கற்பக'த்தின் நிலைவிலையிலா நிலையை அடைகின்றது. கற்பகம் – தெய்வவிருட்சம். விரும்பியனவெல்லாம் அளிக்கும் இறைவனைக் 'கற்பகம்' என ஏற்றிக் கூறினுர். 'வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்' என்பதையும் கொள்க.

**சுந்தரர்:**

நாவலூர் நம்பனைப் போற்றி பல பதிகளையும் வணங்கிப் பின் அடியார்கள் எதிர்கொள்ள இத்தலத்துக்கு எழுந்தருளு கின்ருர் சுந்தரர் பெருமான். இறைவனை வணங்கிய தனது அயரா அன்பை அனைவர்க்கும் உணர்த்தப் பாடுகின்ருர் 'கொன்றுசெய்த' எனத் துவங்கும் நட்டபாடைப் பதிகத்தினை. அகத்தியர் தேவாரத் திரட்டின் 'குருவருள், பரையின்வரலாறு, அஞ்செழுத்துண்மை, கோயிற்றிறம், சிவனுருவம், திருவடி, அருச்சனை, அடிமை' என்ற எட்டு நிலைகளிலே 'கொன்றுசெய்த' என்ற பதிகம் ஏழாவது நிலையாய 'அருச்சனை' என்ற நிலையில்

உள்ளது கவனிக்கற்பாலது. ஏழாவது திருமுறையாசிரியர் சுந்தரர் என்பதும் இங்கு நினைவில் கொள்ளற்பாலது. ஏழு இசையாய் இசைப்பயனாய் உள்ள இறையை உணர்ந்துய்ய இப் பதிகம் நற்றுணையாவதாம். காழியிலும், கயிலையிலும், கழுக் குன்றத்திலும் முறையே ஆளுடைப்பிள்ளை, அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் அருச்சனை செய்த அருளிப்பாட்டை அகத்திய னார் தெரிந்தெடுத்தார் எனில் சைவஉலகு செய்தவப்பயனை அளவிடலரிதாம்.

'சென்று சென்று தொழுமின்' 'இறங்கிச் சென்று தொழு மின்' 'நீளநின்று தொழுமின்' என்றெல்லாம் பாடல்கள் தோறும் சொல்லியவே சொல்லி நமக்கு அறிவுறுத்துகின்றார். இங்கு 'நீளநின்று தொழலாவது' கால எல்லையின்றி, இடைவிடாமல் தொழுமாறு உரைத்த உண்மை உய்த்துணர வேண்டிய தொன்றும்.

"நீள நின்று தொழுமின் நித்தலும் நீதியால்
ஆளும் நம்ம வினைகள் அல்கி அழிந்திடத்
தோளும் எட்டு முடைய மாமணிச் சோதியான்
காளகண்டன் உறையுந் தண்கழுக் குன்றமே."

நாள்தோறும் முறைப்படி கால எல்லையின்றி, இடை விடாது அரன்பாதமே காண உருகும் செயலை இந்தப் பாடலில் கூறுகின்றார் சுந்தரர்.

'கண்ணாகிய கருவியால் பொருள்களை அறியும் ஆன்மா வைப் போல, சர்வ காருணிகனான சிவபெருமான் வினைக்கீடாக அமையப் பெற்றதான உடம்பாகி அதனையே தாரகமாக நாடி யுள்ள உயிரை எடுத்து, சென்ற சென்ற பிறவிகளில் சேர்க்கப் பெற்ற ஊழ்வினைகள் பலவற்றையும் உயிர்களிடமிருந்து கவர்ந்து, வினைகளால் வந்தடையும் அப்போகங்களையும் கழித்து, சிவபுண்ணியத்திலே ஆழ்த்துவன்.'

இந்த நிலையைத் தோற்றுவிக்கின்றது மேலே காட்டிய சுந்தரர் பாடல். சாத்திரமும், தோத்திரமும் சாவாமூவா வாழ்வை நல்கும்.

மாணிக்கவாசகர்:

வாதவூரிலே பிறந்தமையால் வாதவூரடிகள் என்றும், வாத வூரர் என்றும் இவரை அழைப்பினும் 'மாணிக்கவாசகர்' என்ற பெயரே மக்களது மனதில் பதிந்துள்ளது. 'மாணிக்கவாசகன்' என்னும் பெயரை வழுவிலாத பேராக வைத்தவன் இவ்வண்டத் தைக் காத்து அருளும் ஐயன்! — சிவபெருமான்.

"பழுதிலாத சொல்மணியினை, பத்திசெய்து, அன்பு
முழுதும் ஆகியவடத்தினுல் முறைதொடுத்து, அலங்கல்
அழுது சாத்தும்மெய் அன்பருக்கு, அகம்மகிழ்ந்து ஐயர்,
வழுவு இலாதபேர் மாணிக்கவாசகன் என்ருர்."

எனப் பரஞ்சோதி பாடுகின்ருர்.

உயிர்க்கு எல்லாவற்றையும் அறியுந்தன்மை வரும்; ஆயின் எல்லாம் செய்யுந்திறன்-வல்லமை வராது. அதனுலே தான் எல்லாம் அறியுந்தன்மையுடையதும், செய்யும் வல்லமை யுடையதுமான அறிவுமயமான ஆனந்தவடிவமான பரம்பொரு ளான ஒன்றை அறிதல் வேண்டுமென்று சொன்னுர் ஆன்ற பெரியோர். அந்த அறிவுமயமான - ஆனந்த வடிவமான பரம் பொருள் 'சிவன்' தான் எனத்தெளிய "சிவன் யெனயானுந் தேறினன் காண்க" என்னும் மணிவாசகம் அறவுரை கூறும்.

பஞ்சகிருத்தியமென்று சொல்லப்படும் ஐந்தொழிலைச் சிருஷ்டி, திதி, சம்ஹாரம், திரோபவம், அநுக்ரஹம் என்பர் வடநூலார். இதுமுறையே, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்று கூறுவர் நந்தமிழர். இதில் ஐந்தாம் தொழிலான அருளிப்பாடு-அருளல் என்று சொல்லப் படுவ தானது ஆன்மாவுக்குக் கடைசியாக ஆண்டவன் செய்கின்ற தான முறைவைப்பாகும். இதை நன்கு ஆயும் போதுநமக்குண் டாகின்றதான முடிவு "இறைவனது திருவடிக்கு நாம் சரணமாக என்றைக்கு நம்மை ஆக்கிக்கொள்ளுகின்ருேமோ அன்றைக்கு அந்த ஆண்டவனுடைய அருட்சக்திக்கு நாம் பரிபக்குவ மென்று சொல்லபடுகின்றதான நிலையை அடைகின்ருேம்" என்பதுதான்,

வினையைச் செய்து கொண்டே இருக்கிறோம் நாம். வினை பொதுவானதெனினும் நல்வினை, தீவினை, என்னுமிரண்டு பிரிவினதாகும். தீவினையை அதிகமாச்செய்தாலும், அதில் நல்வினை அபூர்வமாக தீவினையை விடக்குறைவான எடையள விலேயிருந்தாலும் அந்தக்குறைந்த அளவிலேயுள்ள நல்வினை யும் ஆண்டவனது அடிப்படையில் செய்வோமானுல் அவ் வினைக் கேற்ப ஒரு நல்ல பிறவிக்காக நாம் பிறக்கவேண்டியது இல்லை. இதற்கோர் தகுதி வேண்டும்!- அந்தத்தகுதி எப்போது?

மாணிக்கவாசப் பெருமான் இந்தத் திருக்கழுக் குன்றப் பதியிலே அருளியபதிகத்தில் கூறுகின்றுர்:

"பிணக்கிலாத பெருந்துறைப் பெரு
மானுன் னுமங்கள் பேசுவார்க்
கிணக்கிலாத தோரின்பமே வருந்
துன்பமே துடைத் தெம்பிரான்
உணக்கிலாத தோர் வித்து மேல்வினை
யாமலென் வினை யொத்த பின்
கணக்கிலாத் திருக்கோலம் நீவந்து
காட்டினுய் கழுக்குன்றிலே."

இது சத்திநிபாத உத்தமருள்ளத்திலே திருவடி தோன்றி யதைக் கூறும் பகுதியாம்.

இருவினை யொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் என்று சொல்லப்படும் சித்தாந்த முறையிலே 'இருவினையொப்பு' எனது வினை ஒத்தபின், அதன் பின்னேதான் அந்த இறைவன் நம்மைத்தேடி வருவான் – வந்து அருள் செய்வான் – திருக் கோலங் காட்டுவான் என்று சொல்லும் அளவிலே 'இருவினை யொப்பு' எனப்படுகின்ற மனோலயம்–அது வருகின்ற நிலைய தனைக் காட்டுகின்றுர்.

ஆன்மாவுக்கு உடம்பைத்தந்து, அவ்வுடம்பினுலே ஏற்பட்ட தான உலக வாழ்வைக் கொடுத்து, அவ்வாழ்வினுலே அநுபவிக் கின்றதான இன்ப துன்ப உணர்ச்சியையும் தந்து, இவ்வாறே பலப்படியான பிறவியை அடுத்தடுத்துக் கொடுத்துப் பக்குவ படுத்திய பிறகு இரு வினையொப்பு வருகின்ற நிலையிலே

ஆண்டவனது அருள்-அநுக்கிரகம் கிடைக்கிறது என்ற கருத்தை மணிவாசகம் காட்டுவது இவ்வுலகுக்கு-ஏன் உயிர் இனங்கட்கு செல் காலத் தண்ணீரிலே சிறக்க இறங்கிக் குளிப் பதற்காக அமைத்துக் கொடுக்கப்பட்ட 'படித்துறை'யாகும்.

'இணக்கில்லாததோர்' இன்பம் – துன்பத்தைத் துடைத்த இன்பம். அது, துன்பத்தோடு கலந்துள்ள இன்பத்துக்கு ஒப்பா காமையால் 'துன்பத்தோடு இணக்கம் செய்யாது தான் ஒன் ருகவே அமைந்து வருவதான இன்பம்' என்பதன் பொருளாய் வந்தது. 'எல்லையுட்படாததும் கண்டவர்க்கு விருப்பத்தைச் செய்வதுமாய அழகிய திருவுருவம்' — இதையே 'கணக்கிலாத் திருக்கோலம்' என்றருள்கின்ருர். அதைக் கண்டவர் அதி லேயே அழுந்தி நிற்பர். இங்கு 'திருவடிக்கன்பு அளவுபடா தது; ஏனையனைத்துக்கும் அளவு உண்டென' எண்ண 'களவு படாததோர் காலம் காண்பான்' என்ற நாவரசுப் பெருமானது வாக்கு உரியதாம்.

'பரம்பரனைப் பணியாதே பாழுக்கிறைத்த எத்தனையோ காலம்' — இது களவுபட்ட காலம்.

காலவரையறையைக் கடந்து, காலத்தையும் தோற்றித் தொழிற்படுத்தும் காலனைக் காய்ந்த பிரானுகிய சிவபிரானுல் செய்யப்படுவதான காரியத்துக்குக் காலவரையறையில்லை. அவனுடைய அழியாத இன்பநிலையைப் பெறுவதற்குரியதானது களவுபடாததோர் காலம்.

அதைக் கண்டுதான் ஐயாற்றிலே அப்பரடிகள் 'கடைக் கண் நிற்கின்றேன்' – கடைக்கணிற்கின்றேன்' எனப் பாடினுர்.

இந்தக்காலத்தின் பெருமையை — புண்ணிய பாவங்களா னது சமநிலைப்படுவதான காலத்தை 'இருவினையொப்பாம்' நிலையை குமரகுருபர முனிவர்,

'நால்வகையாம்
சத்திநிபாதம் தருதற்கு இருவினையும்
ஒத்துவரும் காலம்'

எனக் கந்தர்க் கலிவெண்பாவிலே கூறுகின்ருர்,

ஆண்டவனால் செய்த மிகப் பெரிய அநுக்கிரஹங்களை யெல்லாம், மனிதன் தனது முழு முயற்சியினால் தெரிந்து தெளிந்து தேறல் வேண்டும். ஆனால், அப்படி நிகழ்வதா யில்லையென்னும் போது திரோபவ சத்தியினால் நினைவுபடுத்தப் படாமல் போய்விடுகின்றது என்றே கொள்ளல் வேண்டும். 'எனைத்தானும் நல்லவை கேட்க ஆன்ற பெருமை தரும்' என்ற குறளுபதேசத்தைக் கொண்டு முன்னோர் மொழிந்த பொருளைக் கேட்டு தநுகரணபுவன போகங்களைத் தந்த இறைவனை இடை யருது நினைத்தல் வேண்டும்; இதுவே இறைவனுக்குச் செய் கின்ற நன்றி. இறைவனைப் பற்றிய சதா நினைவு இருக்கு மானால் அந்த நல்ல ஒழுக்கமே நன்றிக்கு வித்தாகுமென்றால் மிகையல்ல. ஆனால் இறைவன் எண்ணங்களுக்கு அப்பாற் பட்டவனாயிற்றே! இப்படிப்பட்ட இறைவனைத்தான் மணிவாசகர் 'மாற்றம் மனம்கழிய நின்ற மறையோன்' என்றார்.

வாக்கு, மனம் கடந்து இறைவனை காண்பதெவ்வாறு? 'ஒன்றியிருந்து நினைமின்கள்' என்ற அப்பரடிகளது வாக்கிலும், 'ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு' என்ற பட்டினத்தடி களது பாட்டும், 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்று சொன்ன மணிவாசகரது அநுபவமும் அந்த இறைவனைக் காட் டும். 'உள்ளம் உருகின் உடனாவர்' என்ற திருவுந்தியார் உரு கிய உள்ளத்துக்கு அந்த இறைவன் வெளிப்படுவான் என்று கூறும். ஆகவே தன்னையறிந்தால், அல்லது இவ்வுலகை உணர்ந்தால் மட்டும் அது ஞானம் ஆகாது; மறைந்து கிடக் கும் 'பரம்பொருளை'க் காண்பதே ஞானம் ஆகும். சிறப்பென் பது எல்லாப் பொருளினும் உயர்ந்ததாகும்; 'ரத்தினம்' எல்லா வகைப் பொருளினும் உயர்ந்ததே. வீட்டுக்கு நியமித்த காரண ரான இறையைச் 'செம்பொருள்' என்றார் வள்ளுவர். அப்பொரு ளைக் காண்பதே மெய்யுணர்வாம். பிறப்பு என்ற பேதமை நீங்க — அந்தச் சிறப்புடைய செம்பொருளைக் காண்பது அறிவு ஆக வைக்கப்பட்டது.

அருணகிரிநாதர்:

ஞான பக்குவமடைந்தவர்க்கு அநுக்கிரக சத்தியாய்ப் பதி கின்றவன் — வெற்றிவேலாயுதமேந்திய பெருமான் முருகன்,

இந்த அழகனைப் பாடுவதையே பணியாகக் கொண்டவர் அருணை முனிவரெனப்படும் அருணகிரிநாதர். பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த இவர் திருக்கழுக்குன்றப்பதியை வந்தடைகின்றார்; அறுமுகனை அன்போடு பாடுகின்றார்.

பூவுலகிலே மேலான சிறப்பை பெற்று தேவேந்திரனது நகரான அமராவதிக்கு ஒப்பானது இத்தலமென அழகு நிறைந்துள்ள கழுக்குன்றத்தில் வீற்றிருந்தருளும் பெருமாளே' எனக் கூறுவதாக அமைந்த 'அகத்தினைக் கொண்டு' என்று துவங்குவதான திருப்புகழின் இறுதியடி,

"செகத்தி லுச்சம்பெற் றமராவதி
யதற்குமொப் பென்றுற்றழகே செறி
திருக்கழுக் குன்றத்தினில் மேவியபெருமாளே"

என்று முடிகின்றது.

அடுத்து, "எழுகு நிறைநாபி" எனத் துவங்கும் பாவிலேயுள்ள இறுதியடி,

"கட லொலிய தானமறை தமிழ்களோது
கதலிவன மேவு பெருமாளே"

என முடிகின்றது.

கடலினது ஒலி எவ்வாறு எழுகின்றதோ அவ்வாறே பெரிய முழக்கங்கள் கேட்கிறது. ஏன்? வேதங்களையும், தமிழ்ப்பாக்களையும் கதலி (வாழைக்காடு) வனத்தில் ஓதுகின்ற முறை. தேவார-திருவாசக ஒலி அவ்வாறு அன்பர்களால் ஓதப்பட்டது என்பது நமக்குப் புலனாகின்றது.

'குழலொலி, யாழொலி, கூத்தொலி, ஏத்தொலி எங்கும்' என்று பல்லாண்டிசைப்பதைப் போன்று

"முழாவொலி யாழொலி முக்கணாயகன்
விழாவொலி மணத்தொலி வேள்வியாவையும்
வழாவொலி மறையொலி வானையுங்கடந்
தெழாவொலி கடல்கிளர்ந்தென வொலிக்குமால்"

என்று திருக்கழுக்குன்றப் புராணத்துப் பாடல் குறிக்கிறது.

மூர்த்தி – தீர்த்தம் :

மணிவாசகப் பெருமானுக்கு, குருவடிவாய்க் காட்சி அளித்த இறைவன் 'வேதபுரீஸ்வர'ராகவும், இறைவி 'பெண்ணினல்லா' ளம்மையாகவும் பெயரேற்று அருள்புரிகின்றனர். மற்றும் மலைச் சொக்கநாயகி – அடிவாரத்திலே 'பக்த வச்லர்' 'திரிபுர சுந்தரியுமாக இருந்து வந்தடைந்தோரை வாழவைக்கின்றனர். இத்தலத்து இறைவனைப் பாடிய ஞானசம்பந்தர்,

"பெண்ணினல்லாளை யொருபாகம்
இணையல் செய்தான்"

எனக்கூறும் பகுதியிலே அம்மையை – அவளுக்கு உரிய அழகான –குளிர்ச்சியான பெயரைக் குறிப்பிடுகின்றார். 'பெண்ணினல்லாளொடும் பெருந்தகை இருந்ததே' என்பதும் இங்கு எண்ணுதற்குரியதாம்.

சற்றேறத்தாழ முந்நூறு ஏக்கர் அளவை உடைய நிலப் பகுதியிலே அறுநூறடி உயரத்திலே யுள்ளதான இந்தமலை நான்கு சிகரங்களை யுடையதாக அமைந்து அழகுற விளங்குகின்றது.

வேதகிரியானைத் தொழ நாள்தோறும் தவறாமல் மதியம் பதினோருமணி யளவில் இரண்டு கழுகுகள் வட்டமிட்டு வந்து பண்டை வேளாளர் மரபினர் ஒருவர் அளிக்கும் சர்க்கரைப் பொங்கலை உண்டு மீண்டும் வட்டமிட்டுச் செல்கின்றது. இக் காட்சியினை வடநாட்டினர் - நம் நாட்டினர் எல்லோரும் குடும்ப சகிதம் கூட்டமாகக் கண்டு களிக்கின்றனர்.

குன்றின்மேல் ஒருபக்கம் சர்க்கரைப் பொங்கல் ஒரு கிண்ணத்தில் - நீர் ஒரு கிண்ணத்தில் இதை ஒரு தட்டிலே வைத்துக் கொண்டு அந்த வேளாளர் அமர்கின்றார். கழுகுகள் வட்டமிட்ட நேரம், அந்த இருகிண்ணங்களையும் எடுத்துவைக்கிறார். கழுகுகள் ஒன்றன் பின் ஒன்றாக வந்து பொங்கலை மூக்கினால் கொத்தி உண்டதும், பின் அந்த அலகை (மூக்கு நுனியை) தண்ணீர் உள்ள கிண்ணத்தில் அலம்புகின்ற முறையிலே - அந்த நீரைப்பருகியும் செல்லும் காட்சியே 'பட்சி தெரிசனம்' ஆகின்றது.

பன்னிரண்டு ஆண்டுக்கொரு முறை 'மாமகத்தீர்த்தம் மாசி மகத்தின் போது குடந்தையிலே நிகழும். இங்கு 'புனித மாங்கங்கை முதல் பெருந்தீர்த்தம்' யாவுங்கூடி வழிபடுகின்றது.

அதைப்போல திருக்கழுக்குன்றப் பதியிலே, தென்கீழ்க் கோடியிலே ஆயிரத்துக்கும் மேற்பட்ட சதுரகஜ அளவிலே அமைந்த அழகானதோர் குளம்; இது நீராழி மண்டபத்தையும் உடையது. இந்தக் குளம்தான் 'சங்குதீர்த்தம்' என்பது. பன்னிரண்டு ஆண்டுக்கொரு முறைசங்கு ஒன்று பிறக்கிறது. அதன் காரணமாகச், சங்கு பிறந்த குளம்' என்ற பெயர் வழங்குகின்றது. இப்படிச் சங்குபிறக்கின்ற சமயத்தில் (பன்னிரண்டாண்டுக்கு ஒருமுறை) இந்தத்தீர்த்தத்தில் மக்கள் வந்துகூடி நீராடித் தூய்மையடைகின்றனர். ஆண்டுக்கொரு முறை கிடைக்கும் சங்குகளை யெல்லாம் கோயிலிலே சேகரம் செய்து வைத்துள்ளார்கள். பழனி, பரங்குன்றம், அண்ணுமலை ஆகியதலங்களைப் போல் 'கழுக்குன்றமலை'யையும் வலம் (கிரிபிரதட்சணம்) வரலாம். இரண்டறை கற்றுெலேவே இதன் அளவு அமையும்.

"கண்ணுதலான் காதல்செய்கோயில் கழுக்குன்றை
நண்ணியசீர் ஞானசம்பந்தன் தமிழ்மாலை
பண்ணியல்பால் பாடியபத்து மிவைவல்லார்
புண்ணியராய் விண்ணவரோடும் புகுவாரே."

—ஞானசம்பந்தர்

முற்றும்

---

மூவர் பாடிய பண்கள்

1. குறிஞ்சிப்பண்
2. இந்தளப்பண்
3. சீகாமரப்பண்
4. காந்தாரப்பண்
5. பியந்தைக்காந்தாரப்பண்
6. காந்தார பஞ்சமப்பண்
7. கொல்லிப்பண்
8. பழம்பஞ்சுரப்பண்

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 17. இதழ் 4-ன் தொடர்ச்சி]

## III

## SUNDARAMURTI SWAMI

(Abbreviated as SUNDARAR)

Is the Siva manifested at one shrine so distinct from the Siva manifested at another as to endanger the unity of God? If tradition is right, the danger is very real, for Sundarar was already worshipping at one shrine, Tiruvottiyur, when he remembered the lord of Arur, and deciding to go to him like a returning prodigal, sang this stanza.

68. பத்திமையுமடிமையையுங்கைவிடுவான்பாவியேன்
பொத்தினநோயதுவிதனைப்பொருளறிந்தேன்
போய்த்தொழுவேன்
முந்தினைமாமணிதன்னைவயிரத்தைமூர்க்கனேன்
எத்தனைநாள்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே.

68. Ah sinful, I have left the path of love and service
pure!
Now know I well the meaning of my sickness and
my pain.
I will go worship. Fool! how long can I so far
remain
From Him, my pearl, my diamond rare, the king
of great Arur.

— (To be continued)

---

# திருவாரூர்த் திருத்தாண்டகத்தில் ஒருதாண்டகப் பாடலின் பொருள் விளக்கம்

கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர். சைவசித்தாந்த வித்தகர்,
வித்துவான். திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்,
தி ரு வை யா று.

திருச்சிற்றம்பலம்

உயிரா வணமிருந் துற்று நோக்கி யுள்ளக்
கிழியி னுரு வெய்தி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால் உணரப்
படுவாரோ டொட்டி வாழ்தி
அயிரா வணமேறு தானே றேறி யமரர்நா
டாளாதே யாரு ராண்ட
அயிரா வணமேயென் னம்மா னேநின் அருட்கண்ணால்
நோக்காதார் அல்லா தாரே.

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை:

மனம் ஒருமைப்பாடு உறுவதற்காக மூச்சையடக்கி நின்று, இறைவர் திருவுருவை அழுத்தமாக நினைத்துக் குறிக்கொண்டு, மனமாகிய கிழியில் அவர் திருவுருவத்தைப் பொருந்தச் செய்து, அவ்வுருவத்தைக் கடவுளாகவே பாவித்து, அவரைப் போற்றி வழிபட்டு, அதன் பயனை அவர்க்கே அர்ப்பணம் பண்ணி, அவ்வாறு செய்தேன் என்னும் தற்போதம் அற்று, சிவத்தோடு ஒன்றி, சதா சீவன் முத்த நிலையில் இருப்பவர்களோடு கலந்து வாழ்வீர். அத்தகைய நீர் இவற்றில் ஒன்றும் செய்யாத என் போல்பவர்களுக்கு எளிதில் கிடைப்பீரா?

இரண்டாயிரம் கொம்பையுடைய யானையை ஏறி நடத்தி, சிவலோகத்தை ஆளுவதை விட்டு, காளை மாட்டில் ஏறிக் கொண்டு திருவாரூரில் அரசராக நின்று அதை ஆண்டுவந்த சந்தேகமில்லாத உண்மைப் பொருளாக விளங்கும் எம் தலைவரே! உம்முடைய திருவருள் நோக்கம் பெற்றவர்களே மேற்

கூறியவாறு உம்முடைய கருணைக்குப் பாத்திரமாவார்கள். அல்லாதவர் பாத்திரம் ஆகாதவர்கள்.

விளக்கம்:

சிவபெருமான், சுந்தரபாண்டியனாகி மதுரை நகரைத் தலை நகராகக் கொண்டு ஆண்டு வந்தது போல, கம்பிக் காதழகர் என்னும் பெயரோடு திருவாரூரைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டை ஆண்டு வந்தார். அங்கு அறுபத்துநான்கு திருவிளையாடல்கள் செய்தது போல இங்கு 360 திருவிளையாடல் களைச் செய்தார் என்பது திருவாரூர்த் தியாகராச லீலையால் அறியப்படுவதால் ஆரூராண்ட அயிராவணமே! என்றார்.

முதல் அடியில் உயிராவணம் என்பதற்கு முச்சை அடக்கி என்பது பொருள். (உயிர்த்தல் — முச்சுவிடுதல்) இரண்டாம் அடியில் உயிராவணம் என்பது உயிர் ஆகும் வண்ணம். (அழுத்தமாகத் தியானித்து) மூன்றும் அடியில் அயிராவணம் என்பது சிவன் ஏறும் யானை. இது இரண்டாயிரம் கொம்புகளை உடையது. இது,

கங்கைநதி சடைக்கரந்த கணவனு ருருக்கலந்த
தனக்கே யல்லால்
துங்கமணிக் கோடிரண்டா யிரம்படைத்த கரியெவர்க்குந்
தூண்டன் முற்று
தங்கனெடும் புவனத்தென் றமைந்தனள்போற் பாசமொடங்
குசங்கை யேந்து
மங்கலமிக் கருள்பேரூர் மரகதவல் லியினிருதாள்
வனசம் போற்றி.

என்னும் திருப்பேரூர்ப் புராணத்தால் அறியக் கிடக்கின்றது. (கடவுள் வாழ்த்து. பாடல் 3) அந்த அயிராவணம் வெண்மை நிறம் உடையது. அது,

கார்கொண்ட கவுண்மதக் கடைவெள்ள முக்கட்
கடைக்கடைக் கனலுமெல்லை
கடவாது தடவுக் குழைச்செவி முகந்தெறி
கடைக்கா திரட்ட வெங்கோன்

போர்கொண்ட வெண்டோட் பொலங்குவடு பொதியும்வெண்
பொடிதுடி யடித்துவைத்துப்
புழுதியாட் டயராவொ ரயிராவ ணத்துலவு
போர்க்களிற் றைத்துதிப்பாம்.

என்னும் மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழால் அறியலாம். (விநாயகக் கடவுள் துதி.)

ஈற்றடியில் உள்ள அயிராவணம் என்பது உண்டோ இன்றோ என ஐயமுறுதபடி உண்மைப் பொருளாக நிற்கும் நிலை. (அயிர்த்தல் — சந்தேகித்தல்.)

இலக்கணம்:

முன்னிரண்டு அடிகளின் முற்பகுதியும் அவ்வாறே பின்னிரண்டு அடிகளின் முற்பகுதியும் ஒன்றிவர அமைந்திருத்தலால் இரண்டடிப் பாடக மடக்கு என்னும் சொல்லணி வகையுள் அடங்கும்.

---

---

உலகெலாம் (பெரியபுராணத்து முதல், இடை, கடை)

உலகெலாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில்சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்ருெளி போற்றிநின்(று)
ஆதி யார்அரு ளாதலின் அஞ்செழுத்(து)
ஓதி ஏறினுர் உய்ய உலகெலாம்.

என்றும் இன்பம் பெருகும் இயல்பினுல்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளார்அடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்.

---

## சுந்தர மூர்த்தி சுவாமிகளின்
# அற்புதத் திருப்பதிகங்கள்
## Hymns of St. Sundarar

திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள், M. A.,
தமிழ் விரிவுரையாளர்,
காசி இந்துப்பல்கலைக்கழகம், காசி.

---

### Tiruttondattogai.

திருத்தொண்டத்தொகை: பண்: கொல்லிக்கௌவாணம்

வம்பறு வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணு
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கர்க்கும் அடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

I am the slave of the servants of my master, St. Tirugnana Sambandar, Who never worshipped any thing or anyone but Siva.

I serve the slaves of Eyarkon kalikkamar, and, Tirumular, our leader.

I am the servant of Dandi, the clear-eyed one, and Murkka Nayanar.

---

(To be continued)

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## திருத்தெள்ளேணம்

இனித் திருத்தெள்ளேணம்;இத்திருப்பாவில் திருஞானத்தால் அறியத்தக்க ஊரும் பேரும் உருவும் இல்லாதவன் அநேக ஊரும் பேருமான முறைமையும், நாமருள் பெற்றபின் பெறுத வர்களொருவருமில்லை யென்றுணர்தலும், யான் பெற்றதற்கு உலகம் நகைக்கு மென்றலும், யானென்ப தொழிந்து சிவ மாதலும், அரியபொருளெளிதாய்த் தோன்றியுள்ளடங்கலும், தன்னை யறியாமல் ஆனந்தம் விளைதலும், திருவடி தரித்தவுடன் சிவமாதலும், மறந்து மறவா தொழிதலும், கல்லிலே நாருரித் தல் போல ஆண்டு கொண்ட முறைமையும், கனவிலுமறியாப் பொருள் நனவில் வெளிப்படுதலும், சிவத்திற் கலந்தவுடன் தனக்குச் சுதந்தர மெய்தலும், தவத்துக்கு வெளிப்படாப் பொரு ளெளிதாய்ச் சிவானந்தம் விளைத்தலும், ஆன்ம போதத்துக்கு வெளிப்படாப் பொருள் எளிதிற் பதிபோதத்துக்கு வெளிப்படுத லும், நூலுக்கு வெளிப்படாப் பொருள் அனுபவத்துக் கெளிதாய் வெளிப்படலும், புசிக்கப்படாத ஆனந்தக் கடலைத் திருவடி ஞானத்தைப் பெற்றுற் புசித்துத் தொலைதலும், புறச்சமயத்துக்கு வெளிப்படாத பொருள்அடி ஞானத்தைப் பெற்றுல் வெளிப்படு முறைமையும், சாத்திர சமயங்களில் மயங்காது சிவபதத்தைப் பெற்றவுடன் அடையு முறைமையும், பெற்ற விடத்துச் சுத்தா வத்தை நீங்கு முறைமையும், எங்கு மிகுந்தபடி தன்னிடத் திருக்கு முறைமையும், எடுத்த திருமேனி யெல்லாம் பரம்

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை—திருவான்மியூர், மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத் தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரு. 13/- ஷெ நூல் நிலையத்தில் கிடைக்கும். 20% கழிவு உண்டு.

பொருளென்னு முறைமையும் ஆக எவ்வகைப் பேதமும் பரம் பொருளுண்மை யெனக் காண்க.

திருத்தெள்ளேணம் தில்லையிற் பாடியதென்றே திருவாதவூர்ப் புராணம் கூறும்.

தெள்ளேணம் கோட்டல் என்பதற்கு முச்சில் கொட்டல் என்கிறார்: முச்சில் என்பது சிறுமுறம். அதனைக்கொண்டு இடித்த சுண்ணத்தைத் தெள்ளத் தெறுதல் என்பது தெள்ளேணங் கொட்டல்.

இனி, யான் பெற்ற பேறுக்கு இவ்வுயிர் பரிபாகமோவென உலகம் நகைப்பதான:—

அரிக்கும் பிரமற்கு மல்லாத தேவர்கட்குந்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளு மென்பதுகேட் டுலகமெல்லாஞ்
சிரிக்குந் திறம்பாடித் தெள்ளேணங் கொட்டாமோ.

(இ - ள்). ஞானப்பெண்களே! கேண்மோ! திருமால் அயன் இவர்களன்றி மற்றுள்ள தேவச்சாதிக் குழுக்கள் தங்கட்கும் அறிவரிதாய்ப் பூரணமாய் நின்ற பரமசிவம் எழுந்தருளித் திருவுருவைக் காட்டி உருகுதலைச்சென்ற உள்ளமாக்கிய பெருங் கருணையை எல்லா உலகத்தாரும் கேட்டவுடன் அபக்குவம் பக்குவமானதோ வென நகைக்குந் திறத்தைத் துதித்து ஞான முச்சில் புடைப்பிர்கள் என அருளியதைக் காண்க.

---

# CHRISTIANITY AND VEDANTA

Do the highest teachings of Christ accord with the teachings of Vedanta? If they do, then. need a true Christian view Vedanta and the propagators and followers of the Vedantic path with antagonism? On the other hand, if the highest teachings of Jesus do not agree, broadly, with the Vedantic view, then what are the differences that make them poles apart? Finally, is it necessary for a Christian to change his formal faith to take up the Vedantic way of life, or for a non-Christian to embrace the Christian faith if he were to believe in Christ and his teachings? These are interesting questions, correct answers to which will remove a lot of misunderstanding that is now rampant among both Christians and non-Christians alike.

Hindus or Sanatana Dharmis believe in the re-incarnations of God, which are called Avataras. Here, God is believed to assume human form and descend on this earth, to carry out the divine work of protecting and re-establishing righteousness and weeding out unrighteousness. A Hindu who believes in God assuming the form of Rama or Krishna can also understand and appreciate his appearing on earth as Christ or Prophet Mohamed, provided the life and work of these personalities have been such as to promote righteousness in life and condemn sin

---

Reproduced with the kind permission of author of "Kaivalya Sudha"-Feb. 1966.

or unrighteous living. Any unbiased Hindu will frankly admit that Christ or Mohamed have both done this fully. The Hindus have, therefore, no difficulty in accepting them as Saints par excellence, in common with any of the typically Hindu Avataras of God.

A Hindu, who has any insight into the real teachings of Sanatana Dharma, does not therefore find the teachings of Jesus contrary, in any way, to the teachings of his own religion. Realisation of the Spirit, the innermost core of man, is the highest purpose of Christianity and Hinduism alike. This being so, the Hindu feels and admits: "Your boat is as good as mine. So, your boat can also take you across the waters to the other shore as effectively as mine can carry me."

Jesus taught in the Sermon on the Mount: "I and my Father in Heaven are one." If this statement is taken literally, then no son and his father can be one in the physical sense. Clearly, Christ therefore meant that "the Spirit in me, stripped of its trappings of body and the other attributes, is identical or one with the Spirit in my Father, the God." Jesus also taught "My father is greater than me." Here, again, if "I and my Father are one", how can "my Father" be greater than "me"? To understand this, we have, once again, to leave aside the literal meaning of the statement and understand its real implication. 'My Father", being the Spirit which is all-pervading, all-knowing and all-powerful, is certainly much greater than the limited "I" with body, mind and the rest of the attributes, born and living in this world and trying to attain life's goal of eternal peace and bliss.

In this sense, the above statement of Jesus is full of meaning. Thus, "my Father" is the universal, unbound Spirit and the 'I' is the limited bound, Soul, attached to and living in a perishable body, but eternally trying to shake off its trappings and become one with its 'Father in Heaven",

It is true that Christ has also said: "I am the way, the truth and the life: no man cometh unto the Father but by me." It is, perhaps, this statement of Jesus that has confused the present-day followers of His faith into thinking that the way to Heaven or Salvation is only through Christ or the faith that He preached viz. Christianity. Again the great mistake made has been in giving these words of Jesus the narrow interpretation based on the literal sense of the words. By "I" what Jesus really meant was 'the Spirit that resides in every person, which claims the body, senses, mind, intellect, reason and ego as its own but can, in essence, see itself as being apart and separate from its body, its senses, its mind, its intellect, its reason or its ego.' To know and realise this 'I'—the Spirit—as apart from the attributes of body, etc. superimposed on it, is the real way: it is the ultimate purpose of human life. To come by this realisation is to attain the knowledge of Truth. The "Father"–the Universal Spirit–can be reached or understood only through the realisation of this 'I' or 'by me'. How true!

Thus, any Vedantin or Sanatana Dharmi does not find any conflict whatsoever between the teachings of Vedanta and the ideals preached by Christ. Christ's followers like St. Paul, who spoke of "the Christ in you" recognised this fact fully and

understood the "I" to mean the Spirit or the "Christ-Consciousness". The teachings of the Church today may not agree with what St. Paul and others like him said. They may also disown the statement of the Christian mystic, Angelus Silesius, that "Christ may be born a thousand times in Bethlehem, but if he be not born anew within your own heart, you remain eternally forlorn." It can only be said in this regard that the Church may have its own reasons for doing so, but it does not certainly aim at helping its votaries to attain the highest that Christ himself, in his infinite love for all, wished them to attain in their life. This, however, need not distract us from the fact that there is no conflict between the highest essence of Hinduism and Christianity.

By and large, the Church generally has not been able to shed its proselytising spirit and the idea of consolidating the world populace under the banner of one religious faith. As long as this policy continues, its antagonism towards other religious faiths will also continue and find expression through its votaries. There is one ray of hope, however. More and more thinking Christians are, every day, breaking the barriers of the severe compartmentalism that the Church has clapped over them, and are finding out for themselves, through a comparative study of the higher teachings of the other faiths, that religions may be different in names, rituals and dogmas may vary, but the essence of each religion and the goal to be reached through each is the same. Gradually, when the number of such thinking Christians increases, one may hope that their concerted pressure on the Church will make it mend its present policy of promoting an artifical barrier between its votaries

and those of other religious faiths. Men like the late Christian mystic, Joel Goldsmith would not have worked in vain.

In Spirit, there is no antagonism between the teachings of Vedanta and the Christ. It is purely based on the teachings of Jesus that Joel Goldsmith said: "It is only when you have transcended mind and thought that the mind and body are governed and controlled by the 'I' that is God." Is any other proof required, than the above, to convince one that the goal pointed out by Christ is the same as that revealed by Vedanta? Any apparent conflict is only in interpretation on the basis of wrong understanding. If the Church does not want to remove such wrong understanding amongst the Christians, it must be having its own special reasons for doing so.

Saints and their teachings always have a profound influence on souls who are striving to transcend the miseries of ephemeral life and reach the Eternal Spirit. Jesus and his teachings are no exception. The number of non-Christians who would have drawn inspiration from Jesus and his teachings must be legion, for nothing debars non-Christians from drawing inspiration from Jesus. Christ has undoubtedly preached the Eternal Truth called by Hindus as Vedanta. The so called Christian world has not and is not yet prepared to accept the eternal side of Christ's teachings

Every religion has two sides, its creeds and rituals on one side and its eternal teachings on the other. The element that can be common to every religion is this eternal teaching. If Christians will try to recognise, this eternal side of their religion, they

will find it is the same as the Vedanta i. e. dominance of Spirit over organs and matter. This will pave the way for the harmony between the two religions in spite of the differences in rituals and forms. Are not the four sessions of the Ecumenical Council trying to re-examine the values of creeds and rituals and trying to go to the Spirit?

---

The body is cleansed by water, the mind is purified by truthfulness, the individual soul by learning and austerities and the intellect by knowledge.

*– Aphorism.*

---

பஞ்ச பூதஸ்தலங்கள்

1. காஞ்சீபுரம் – பிருதுவி
2. திருவானைக்கா – அப்பு
3. திருவண்ணுமலை – தேயு
4. திருக்காளத்தி – வாயு
5. சிதம்பரம் – ஆகாசம்.

கடல்விடம் நுகர்ந்த காசினி லிங்கம்
காஞ்சிமா நகருறை லிங்கம்;
காவிரி வடபால் வருதிரு ஆனைக்
காவினில் அப்புலிங் கமதாம்;
வடதிசை அண்ணு மலையினில் லிங்கம்
வன்னியின் வடிவு; காளத்தி
வாயுலிங் கமதாம்; சிதம்பர லிங்கம்
மாசில்ஆ காயலிங் கமதாம்.

— தில்லைக்கலம்பகம்

# தட்சிணாமூர்த்தித் தத்துவம்

திருமதி ந. சரசுவதி அம்மாள்
ஜெய்வாபாய் மகளிர் உயர்நிலைப் பள்ளி,
திருப்பூர்.

முனிவர் ஒரு நால்வர். அவர் சனகர், சனற்குமாரர், சனாதனர், சனந்தனர் என்பவர். தாங்கள் பல நூல்களையும் ஓதி உணர்ந்தும், பொருள் இன்னதென்று விளங்காமை யானும், மனம் ஒருவழிப்பட்டு நில்லாமையயானும், கயிலையின்கண் நின்று சிவபெருமான் சந்நிதியில் இக்குறை நீங்கி உய்திபெறும் வகை வேண்டி, முறையிட்டு நின்றனராக, அதற்கு இரங்கிய சிவ பெருமான் சடைமுடி, கல்லாடை இவைகளை யணிந்து ஒரு கல்லாலின் நிழலில் தெற்கு நோக்கி அமர்ந்து, இடதுகரம் மார்பில் அமைத்து, வலக்கை விரல்களாலே ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களோடு கலந்து நின்ற ஆன்மா அவற்றினின்றும் விலகி, இறைவன் திருவடி நிழலை, அடைய வேண்டும் என்னும் குறிப்பில் அவர்களுக்குத் தெளிவுறுத்தி அருளினர் என்பர். இதனை ஒரு வார்த்தையும் சொல்லாமலே இக்கைக் குறிப்பினாலே விளக்கினர் என்னும் கருத்தமைத்து,

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறை ஆறங்கம்
முதற்கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வர்க்கு வாக்கிறந்த பூரணமாய்
மறைக்கு அப்பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி
இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்து பவத்தொடக்கை வெல்வாம்."

என்னும் திருவிளையாடற் புராணம் தட்சிணாமூர்த்தித் துதியில் கூறப்படுகிறது.

## திருக்கரக் குறிப்பால் விளக்கியது

கைவிரல்கள் ஐந்தனுள் பெருவிரல் பதியைக் குறிக்கும். அதன் வேருகி விலகி நிற்கும் நான்கு விரல்களுள் ஆள் காட்டி விரலாகிய சுட்டு விரல் பசுவைக் குறிக்கும். அதை அடுத்த மூன்று விரல்களும் ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும் மலங்களையும் குறிக்கும். சுட்டுவிரல் பெருவிரலின் அடிப் பாகத்தில் இணைந்து நிற்பது மலங்களோடு கலந்து நின்ற பசு, மல நீக்கம் பெற்று இறைவன் திருவடி நிழலை அடைந்து பேரின் புறுவதைக் குறிக்கும். மலத்தோடு கலந்து நிற்கும் ஆன்மா இறைவனோடு கலக்க வேண்டுமென்பதை,

"ஆணவத்தோடத்துவிதம் ஆகுதல் போல் மெய்ஞ்ஞான
தாணுவினேடத்துவிதம் சாரும் நாள் எந்நாளோ?"

என்று கூறுகின்றனர் தாயுமானவர்.

கைவிரல்களில் சித்தாந்தக் கருத்தை இறைவன் உணர்த்தி யதை,

'மும்மலம் வேறுபட்டொழிய மொய்த்துயிர்
அம்மலர்ப் பதியினேடு அணையும் தன்மையை
கைம் மலர்க் காட்சியில் கதுவ நல்கிய
செம்மலை அலகு உளம் சிந்தியாதரோ'

எனத் திருவாவடுதுறை ஆதீனம் கச்சியப்ப முனிவர் பெருமான் கூறுகின்றனர்.

## என்ன வியப்பு!

இத்தட்சிணுமூர்த்தி வடிவம் இளமை வடிவம் உடைய தென்றும், அவர் முனிவர்க்கு அருளிய தன்மை பெரிய வியப் பைத் தருவதென்றும், ஆதி சங்கரர் தமது சிவானந்தலகரியில் "என்ன வியப்பு! என்ன வியப்பு! கல்லாலின் அடியில் அமர்ந்து உபதேசிக்கும் குரு இளைஞர். அவர் மாணக்கராக வந்தவர் முதியவர். குரு உபதேசித்ததில் ஒரு சொல்லுமில்லை. மாணவர் களுக்கு விளங்காதன ஒன்றுமில்லை; எல்லாம் விளங்கிக் கொண்டனர்" என்று கருத்தமைத்துப் பாடுகின்றனர்.

## மூவகை வடிவம்

யோக வடிவம் :- இறைவன் ஆன்மாக்களுக்கு அருள் புரியும் வடிவங்கள் மூன்றில் தட்சிணாமூர்த்தி வடிவம் யோகவடிவம். அது துறவு நிலை உடையார்களுக்கு அருள் செய்யும் பொருட்டுத் தோன்றியது.

போக வடிவம் :— அடுத்தது உமையொரு பாகர் (அர்த்த நாரீசர்) வடிவம். அது உலகில் கணவன் மனைவிமார்களோடு கூடி இல்லற தர்மம் இனிது நிகழுமாறு தோன்றியது.

அகோர வடிவம் :- அகோர வடிவமென்பது சதாசிவ மூர்த்தியின் ஐந்து முகங்களில் தெற்கு நோக்கிய முகமும் அகோர வீரபத்திரர் வடிவமும் ஆகும். இது ஆன்மாக்கள் செய்யும் பாவங்களை ஒழித்தற்குத் தோன்றியது ஆகும்.

இம் மூவகை வடிவங்களையும் பற்றி சிவஞான சித்தியாரில்,

"போகியா யிருந் துயிர்க்குப்
போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி
யுதவுத லதுவு மோரார்
வேகியா னற்போற் செய்த
வினையினை வீட்ட லோரா
ருகியா மூட ரெல்லா
மும்பரி னொருவ னென்பார்"

(சு. பக்கம் முதற் சூத்திரம், முதல் அதிகரணம் பாடல் 50) எனக் கூறப் பெற்றுள்ளது.



## கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 11152 | தருக்க இயல் விளக்கம் | மு. ரா. முருகவேள் M. A., M. O. L., |
| 11153 | காளிதாசரின் மேகசந்தேசம் | |
| 11154 | இலக்கணத்திற் கற்பனைகள் | மு. ரா. முருகவேள், M. A., M. O. L., |
| 11155 to 57 | பன்னிரு திருமுறைப் பாராயணமும் தற்காலத்தில் நிகழ்ந்த அற்புதங்களும் | கயப்பாக்கம் திரு சோமசுந்தரம் செட்டியார் |
| 11158 | ஆடும் பரிவேல் அணிசேவல் விருத்தங்கள் (திரு எழுகூற்றிருக்கையுடன்) | அருளிசை S. V. சுப்பிரமணியன் & S. V. சேதுராமன் |
| 11159 | கந்தபுராண வரலாறு | சித்தாந்த வித்தகர் திரு. சோமசுந்தரம் செட்டியார் |
| 11160 | பன்னிருதிருமுறைத் திரட்டு (பதிக வரலாறுகளுடன்) | கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார் |
| 11161 | நவராத்திரி வரலாறும் தேவி தோத்திரப் பாடல்களும் | Do. |
| 11162(B) | தினசரி பாராயணத் திரட்டு (பஞ்ச புராணம்) | சித்தாந்த வித்தகர் |
| 11163 | இலிங்கோப நிடதமும் தமிழ் தாற்பரியமும் | சிவாகமக்குரு அநாதி சைவ பரம்பரை |
| 11164 | நெல்லை மாவட்டக் கோவில் வரலாறு | டாக்டர் இ. மு. சுப்ரமணிய பிள்ளை |
| 11165 | பிள்ளைப்பெருமாள் (சுவாமி தாயுமானவர்) | திரு. கு. ஆறுமுகம் பிள்ளை |
| 11166 & 66A | தாயுமான சுவாமிகள் பாடல் | தருமை ஆதீன வெளியீடு 21-5-65 குருபூஜை விழா மலர் |
| 11167 & 68 | மணிவாசகப் பாமாலை | கா. இராமநாதன் செட்டியார் B. A., B. L., |

திருப்பனந்தாள் — ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'

| | | | ரூ. பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) | — | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | — | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம் மட்டும் புதிய பதிப்பு) | ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, | ... | 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, | ... | 1 30 |
| 7* | திருவாசகம் ,, | ... | 0 56 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழைய உரையும் (புதிய பதிப்பு) | ... | 2 90 |
| 9* | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் தெளிவுரை | ... | 1 50 |
| 10 | ,, ,, மூலம் மட்டும் | ... | 0 56 |
| 11* | திருமந்திரம் (புதிய பதிப்பு) ,, | ... | 2 25 |
| 12* | பதினோராந்திருமுறை (புதிய பதிப்பு) ,, | ... | 1 50 |
| 13* | பெரியபுராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 14 | பெரியபுராணம் உரை நடை | ... | 2 00 |
| 15 | திருத்தொண்டர் புராண சாரம் | ... | 0 40 |
| 16* | அகத்தியர் தேவாரத் திரட்டு | ... | 0 36 |
| 17 | திருவிளையாடற் புராணம் மூலம் மட்டும் | ... | 3 00 |
| 18 | திருவிளையாடற் புராணம் உரை நடை | ... | 2 25 |
| 19 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) | ... | 1 75 |
| 20 | கந்த புராணம் — முதல் மூன்று காண்டங்கள் மூலம் மட்டும் | ... | 2 75 |
| 21 | ,, யுத்த தேவ காண்டம் ,, | ... | 2 00 |
| 22 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 50 |
| 23 | கந்தபுராண உரைநடை ,, | ... | 3 00 |
| 24 | திருக்குறள்-அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 25 | திருக்குறள்-பொருட்பால் ,, | ... | 2 50 |
| 26 | திருக்குறள் — காமத்துப்பால் ,, | | |
| | ஷை 24. 25, 26. திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 00 |
| 27 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் (அச்சில்) | ... | 0 75 |
| 28 | தாயுமான சுவாமிகள் பாடல் குறிப்புரை | ... | 1 25 |
| 29 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 25 |
| 30 | திருக்கைலாய ஞானவுலா— உரையுடன் | ... | 0 50 |
| 31 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 32 | கந்தரனுபூதி மூலம் (அச்சில்) | ... | 0 13 |
| 33 | கந்தரனுபூதி தெளிவுரை | ... | 0 35 |
| 34 | கந்தர்கலி வெண்பா - ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புகளுடன் (அச்சில்) | ... | 0 37 |
| 35 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் | ... | 0 10 |
| 36 | கந்தர்கலி வெண்பா மூலமும் உரையும் (அச்சில்) | ... | 0 37 |
| 37 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும் ஹிந்தியும் | ... | 0 50 |

Registered With the Registrar of
Under No. R. No. 1485/57.



| | | |
|---|---|---|
| 39 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... 0 75 |
| 40 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... 0 37 |
| 41 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... 0 13 |
| 42 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா-மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக் கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனுட்சியம்மை குறம் | ... 2 75 |
| 43 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | 1 25 |
| 44 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச் செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 00 |
| 45 | பண்டார மும்மணிக் கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை | ... 1 00 |
| 46 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... 0 75 |
| 47 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... 0 50 |
| 48 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... 0 25 |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... 0 15 |
| 52 | திருக்குறள்-உரைக்கொத்து-அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... 2 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி-தெளிவுரையுடன் (அச்சில்) | ... 0 50 |
| 56 | மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழ் (குறிப்புரையுடன்) | (அச்சில்) |
| 57 | திருவாரூர்-திருப்பனுவல்கள் | ... 0 10 |
| 58 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... 0 10 |
| 59 | பழமொழித்திருமுறை | ... 0 25 |
| 60 | திருவாரூர் நான்மணிமாலை | ... 0 50 |
| 61 | Hymns and Proverbs | ... 0 30 |
| 62 | அப்பர்விழா வெளியீடு | ... 0 25 |
| 63 | நவக்கிரகமாண்பு | ... 0 25 |
| 64 | குமரகுருபரர் வாலாறும். அற்புதத்தேவாரத் திரட்டும் | ... 0 30 |

மேலே கண்ட நூல்கள் இடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.
"தியாகராஜ விலாசம்" 53. பிள்ளையார் கோயில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு:- • இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கோத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:- குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்-66.